# டன்லப்

## ஆர்.எச்.எஸ். ட்ரக் & பஸ் டயர்கள்




## மைல்கள் முன்னேற்றம்!

அத்தாட்சி வேண்டுமா? அநேக மோட்டார் சொந்தக்காரர்களும் மற்றும் டயர் உபயோகிப்பவர் பலரும் வழங்கியுள்ள நற்சாட்சிப் பத்திரங்களை நீங்களே பரிசோதித்துப் பாருங்கள். அவை இப்போது ஒரு தனி பிரசுரத்தில் வெளியிடப்பட்டுள்ளன. எல்லா டன்லப் ஆபீஸ்களிலும் டயர் வியாபாரிகளிடமும் கிடைக்கும்.




**பெரியவை-கனமானவை-பத்திரமானவை-**

**லேடக்ஸ் இணைப்புள்ளவை.**

DX3541M




# மார்கோ ஸோப்

வாசனை நீக்கப் பெற்ற வேப் பெண்ணெயிலிருந்து ஒரு விசேஷ முறைப்படி தயாரிக்கப் படுவது. அதன் அபரிமிதமான கிருமி நாச நுரை அழுக்கை யகற்றி, சருமத்தி னுள் புகுந்து நன்கு சுத்தம் செய்யும். சருமத்திற்குப் புஷ்டியும் மென்மை யும் தரும். அபூர்வ மணம். நுட்ப மான சருமத்திற்கும் ஹானியற்றது.

**A CALCHEMICO PRODUCT**

மதராஸ் ஆபீஸ்:

5/149, பிராட்வே, ஜீ. டி., மதராஸ்

# அதி அற்புத ரகங்கள்!

புகழ் பெற்ற ஸ்விஸ் பாக்டரிகளில் தயாரானது ஒவ்வொன்றும் 5 வருஷ உத்திரவாத முள்ளவை




| | | | |
|---|---|---|---|
| 5 ஜுவல் க்ரோம் | 30/- | ரோல்டு கோல்டு | 33/- |
| 7 ,, க்ரோம் | 35/- | உயர் ரகம் | 38/- |
| 15 ,, க்ரோம் | 44/- | ரோல்டு கோல்டு | 48/- |




| | | | |
|---|---|---|---|
| 5 ஜுவல் க்ரோம் | 28/- | ரோல்டு கோல்டு | 33/- |
| 7 ,, க்ரோம் | 33/- | உயர் ரகம் | 35/- |
| 15 ,, க்ரோம் | 42/- | ரோல்டு கோல்டு | 45/- |




| | | | |
|---|---|---|---|
| முழுவதும் ஜுவல் | 19/- | உயர் ரகம் | 21/- |
| ரேடியத்துடன் | 21/- | சென். செகண்டு | 23/- |
| ஸ்பெஷல் உயர்ந்த ரக மெஷின் | | | 27/- |




| | | | |
|---|---|---|---|
| 5 ஜுவல் க்ரோம் | 26/- | ரோல்டு கோல்டு | 32/- |
| 7 ,, க்ரோம் | 32/- | ரோல்டு கோல்டு | 36/- |
| 15 ,, க்ரோம் | 48/- | ரோல்டு கோல்டு | 58/- |




| | | | |
|---|---|---|---|
| 5 ஜுவல் க்ரோம் | 22/- | உயர் ரகம் | 25/- |
| 5 ,, ரோல்டு கோல்டு | 30/- | உயர் ரகம் | 33/- |
| 15 ,, க்ரோம் | 45/- | ரோல்டு கோல்டு | 55/- |
| டைம் பீஸ் | 20/- | உயர் ரகம் | 25/- |
| பாக்கெட் வாட்ச் | 12/- | உயர் ரகம் | 15/- |

*தபால் செலவு பிரத்தியேகம். இரண்டு கடிகாரங்கள் ஆர்டருக்கு தபால் செலவு இனாம்*

*

**PIONEER WATCH CO.**

**POST BOX No. 11428 - CALCUTTA**

# ஆரோக்யமும் சந்துஷ்டியுமுள்ள குழந்தைகளுக்கு

**அவர்கள் செலவழித்த சக்தியைத் திரும்பப் பெற <u>அதிகப்படி</u> உணவு அவசியம்.**



குழந்தைகளின் விளையாட்டு இயல்பு வேலையிலும் ஆர்வமாக ஜீவசக்தி விரயமாகி விடுகிறார். ருசியிருந்த ஓவல்டின் இழந்த சக்தியை புதுப்பிக்க உதவும்.

ஓவல்டின் இளம் குழந்தைகளுக்கும் சுலபமாக ஜீரணமாகும். விவேகமுள்ள தாய்மார் அவர்களது குடும்பத்தினருக்கு காலையிலும், இரவில் படுப்பதற்கு முன்பும் ஓவல்டினைக் கொடுக்கின்றனர்.

குழந்தைகள் "ஓவல்டின்" மணத்தை விரும்புகின்றனர். அதில் பழுத்த பார்லி மால்டிலிருக்கும் புஷ்டி, ஜீவ சக்தியளிக்கும் குணங்களும், சுத்தமான கட்டுப்பால், விசேஷமாகத் தயாரித்த கோக்கோ, மதிப்பு வாய்ந்த இயற்கை பாஸ்பேட்டுகள், விடமின்கள் முதலியவை நிறைந்த அளவில் அடங்கியுள்ளன.

இளம் உடல் வளரவும் எதிர்கால ஆரோக்யத்தை உறுதிப்படுத்தவும் உங்கள் குழந்தைகளுக்கு "ஓவல்டின்" கொடுங்கள். இப்பெயர் கொண்டது இது ஒன்றுதான்.




# 'OVALTINE'

## ஓவல்டின்

உலகில் மிகப் பிரசித்தி பெற்ற உணவு பானம்.

வினியோகஸ்தர்கள். ஜெஹாம்ஸ்டி ரேடிங் கம்பெனி (இந்தியா) லிட்

OV. 302.

# கல்கி பொருளடக்கம்


| | | |
|---|---|---|
| மலர் 10<br>இதழ் 20 | டிசம்பர் 17 | விக்ருதி ௵<br>மார்கழி 2 |



| | | | |
|---|---|---|---|
| என்ன சேதி? | ... | ... | 9 |
| கட்டுப்பாட்டைச் சபிப்பதேன்? பங்கீட்டை வெறுப்பதேன்? | | ... | 11 |
| கண் திறப்பு | சாஸ்திரி | ... | 16 |
| கப்புவின் ஏமாற்றம் | சபரி | ... | 17 |
| கடவுளின் பிரதிநிதி | ரா. வி. | ... | 19 |
| வருவானா அவன்? | தேவி | ... | 23 |
| இலங்கைக் கடிதம் | ரஜனி | ... | 25 |
| பொன்னியின் செல்வன் | கல்கி | ... | 26 |
| வான்புகழ் வள்ளுவன் | ... | ... | 38 |
| சமுத்திர சுந்தரி (பாப்பா மலர்) | ஸோமாஸ் | ... | 42 |
| நடுக் கடலிலே! | ப. ராதாகிருஷ்ணன் | ... | 45 |
| ரமணியின் ஜெயம் | பி. எஸ். மணி | ... | 51 |
| ஆரோக்கிய ரகசியம் | வி. என். குமாரசாமி | ... | 56 |
| முல்லைச் சிரிப்பு | மூர்த்தி | ... | 58 |
| தங்கையும் தமக்கையும் | எஸ். வி. எஸ். | ... | 62 |
| தலைவலி போய்......! | கா. ராமச்சந்திரன் | ... | 67 |


"கல்கி"யில் வெளிவரும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.

# என்ன சேதி ?

## பிரகாசம் புகார்கள்

ஆந்திரகேசரி ஸ்ரீ டி. பிரகாசம்காரு அவர்கள் 'சென்னைச் சட்ட சபையில் கொண்டுவந்த புகார் கூறும் படலம் ஒருவாறு முடிவடைந்தது. எல்லாவற்றையும் படித்துக் கேட்டுச் சிந்தித்துப் பார்த்த பிறகு ஸ்ரீ பிரகாசம் அவர்களின் மீது நமக்கு அநுதாபம் பிறக்கிறது. "அடாடா! இந்த எண்பது வயதுக்கு மேலான கிழவருக்கு ஏன் இவ்வளவு கஷ்டம்? கிம்மதியாக இருந்து தொலைக்கக் கூடாதா?" என்று தோன்றுகிறது. ஸ்ரீ பிரகாசம் அவர்கள் மற்ற மந்திரிகள் பேரில் கூறிய ஊழல் புகார்களில் சில அவர் பிரதம மந்திரியாயிருந்தபோதே நடந்தவை அல்லது ஆரம்பமானவை என்பது தெளிவாயிற்று. ஆகவே அவர் மற்ற மந்திரிகளின்பேரில் சொல்லும் புகார்களுக்கு வலிவு எப்படி ஏற்படும்? மேலும், மந்திரிமார்கள் கூறிய பதில்களைப் பார்த்த பிறகு ஸ்ரீ பிரகாசத்தின் புகார்கள் பெரும்பாலும் அவற்றின் பயங்கர சொரூபத்தை இழந்துவிட்டன. சிற்சில ஒழுங்கீனங்கள் நடந்துதானிருக்கின்றன. ஆனால் மந்திரிகளில் சிலர் பதில் சொல்லும்போது ஸ்ரீ பிரகாசத்தைக் காட்டிலும் அதிக கார சாரமாகவும் ஆவேசமாகவும் பேசினார்கள். ;புகார்களுக்கு ஆதாரம் இல்லாதபோது இவர்கள் இவ்வளவு ஆத்திரம் காட்ட வேண்டியது அவசியமில்லை. ஊழல் உள்ள இடத்தில் அல்லவா கோபம் வருவது நியாயம்? "நான் சந்நியாசி இல்லை!" "எனக்கு மாமனார் இருந்தால் அதற்கு நான் என்ன செய்வது?" என்றெல்லாம் பதில் சொல்வதில் அர்த்தம் அதிகம் கிடையாது. கனம் பக்தவத்சலம் அவர்களைப்போல் விஷயங்களை மட்டும் எடுத்துச் சொல்லி முடிவைப் பொது மக்களுக்கு விட்டுவிடுவது பொருத்தமாயிருக்கும். ஸ்ரீ டி. பிரகாசம் தமது விடாக்கண்டர் வேலையை இத்துடன் நிறுத்தி வேறு துறைகளில் கவனம் செலுத்தினால் நலமாயிருக்கும்; நலம் அவருக்குத்தான், சம்பந்தப்பட்ட அனைவருக்கும்தான்.

## ஒற்றுமை வாழ்க !

பிரிட்டிஷ் பிரதமர் ஆட்லி அமெரிக்காவுக்குப் பறந்து சென்றார். போன சூட்டோடேயே அமெரிக்க அக்கிராசனர் ட்ருமன் அவர்களுடன் உலக யுத்த நெருக்கடியைப் பற்றிப் பேச்சு வார்த்தை தொடங்கினார் இந்தப் பேச்சு வார்த்தைகள் சீக்கிரமாகவே முற்றுப் பெற்று ஒற்றுமையும் ஏற்பட்டு விட்டது! அதாவது முக்கியமான விஷயங்களில் அமெரிக்காவுக்கும் பிரிட்டனுக்கும் வேற்றுமை இருக்கிறது என்பதில் ஒற்றுமை ஏற்பட்டு விட்டது! ஆட்லி அமெரிக்காவுக்குப் பறந்து சென்றது முக்கியமாக, கொரியா—சீனப் பிரச்னைகளைப் பற்றிப் பேசி முடிவு கட்டுவதற்கே அல்லவா? (1) சீனாவின் பொதுஉடைமை சர்க்காரை அமெரிக்கா அங்கீகரிக்க வேண்டும்; (2) மேற்படி சீன சர்க்காருக்கு யு. என். ஓ. வில் அதாவது ஐக்கிய தேச சபையில் இடம் கொடுக்கவேண்டும்; (3) சீனாவுடன் ஏற்பட்டிருக்கும் தகராறுகள் (பார்மோஸா உட்படச் சேர்த்து) எல்லாவற்றையும் பேசி முடிவு காணவேணும்;—இந்த மூன்று விஷயங்களையும் ஆட்லி வற்புறுத்தியும் ட்ருமன் ஒப்புக் கொள்ளவில்லை. எனவே, இந்த மூன்று விஷயங்களிலும் உள்ள வேற்றுமைகளை அப்படியே விட்டு வைப்பதென்று ட்ருமனும் ஆட்லியும் ஒற்றுமையாகத் தீர்மானித்து அறிக்கையும் விட்டிருக்கிறார்கள்! மற்றப்படி, "கொரியாவிலிருந்து மென்னியைப் பிடித்துத் தள்ளினால் அன்றி வெளியேறுவதில்லை" என்று ஓர் ஒற்றுமையான முடிவு. இன்னும், அணுகுண்டு போடுவதாயிருந்தால் சகலரையும் கலந்து கொண்டு போடுவதாக மற்றொரு ஒற்றுமை முடிவு! யுத்த வெறி மூண்டு விட்டால், யார் யாரைக் கலந்து கொள்ள முடியும்? ஐக்கிய தேச சபையில் இந்தியப் பிரதிநிதி ஸ்ரீ பி. என். ராவும் மற்ற ஆசியப் பிரதிநிதிகளும் செய்யும் முயற்சிகள் எவ்வளவு தூரம் பலன் அளிக்கின்றன என்று பார்க்கவேண்டும்.


நீங்கள் உங்கள் பற்களை
இன்று மக்ளீன் செய்தீர்களா?
வருஷக் கணக்காக நான் மக்ளீன்ஸ் உபயோகித்து வருகிறேன். என் பற்கள் அழகாகவும் வெண்மையாகவும் இருக்கின்றன. நான் வேறு எந்த டூத் பேஸ்டும் உபயோகிக்க மாட்டேன்.
வாயைச் சுத்திகரித்து
மூச்சின் நாற்றத்தை
போக்குகிறது
உமிழ்நீர்
கெடுதலைத் தடுத்து
ஈறுகளைப் பாதுகாக்கிறது.
மேலே உள்ள கறைகளை அகற்றி
பற்களுக்கு
வெண்மை
தருகிறது
இன்றே மக்ளீன்ஸ்
வாங்குங்கள்!
MACLEANS
PEROXIDE
TOOTH PASTE

# கட்டுப்பாட்டைச் சபிப்பதேன்? பங்கீட்டை வெறுப்பதேன்?

பொது மக்களின் நன்மைக்காகவே கண்ட்ரோல் முறை அமுல் நடத்தப்படுவதாகப் பெரிய பெரிய தேசத்தலைவர்கள் உறுதி கூறியிருக்கிறார்கள். கட்டுப்பாட்டை எடுத்துவிட்டால் வங்காளப் பஞ்சத்தைப் போன்ற பஞ்சம் நாட்டில் தாண்டவமாடும் என்று அதிகாரவர்க்க நிபுணர்கள் புள்ளி விவரங்களுடன் நிரூபித்திருக்கிறார்கள். சகலமும் அறிந்த சர்வக்ஞர்களான பத்திரிகையாளர் பலரும், "பற்றாக்குறை நாட்டில் இருக்கும்போது கட்டுப்பாடு இல்லாவிட்டால் அகவிலை விஷம் ஏறுவது போல் ஏறாதா? மக்கள் மகத்தான கஷ்டங்களை அநுபவிக்கமாட்டார்களா?" என்று தெளிவாக எடுத்துக் காட்டியிருக்கிறார்கள். சுதந்திர இந்தியாவின் ஜனநாயக திலகமணிகளான மந்திரிமார்கள் ஓயாமல் "மக்களின் நன்மைக்காகவே கட்டுப்பாட்டை அமுல் நடத்துகிறோம்" என்ற பல்லவியைப் பாடிக்கொண்டு வருகிறார்கள்.

விவகார ரீதியாகவும், அநுபவ வாயிலாகவும் பார்க்கும்போது கண்ட்ரோலும் ரேஷன் முறையும் அவசியம் என்றே ஏற்படுகின்றன. மாபெரும் காங்கிரஸ் தலைவர்களும் ஜனநாயக மந்திரிகளும் உண்மையில்லாததைச் சொல்வார்களா? நன்மையில்லாததைச் செய்வார்களா?—என்பதை எண்ணிப் பார்த்தாலும் நாட்டின் தற்போதைய பற்றாக்குறை நிலைமையில் கட்டுப்பாடும் பங்கீடும் அத்தியாவசியம் என்றே விசதமாகிறது.

அதிவிருஷ்டி, அநாவிருஷ்டி, பூகம்பம், பெருவெள்ளம், சுழற் காற்று,— எல்லாமாகச் சேர்ந்து நாட்டில் விளைவு குறைந்துவிட்டது. அயல் நாட்டிலிருந்து பற்றாக்குறையை நிரப்பப் போதிய தானியம் வருவிக்கக் கூடவில்லை. இந்த நிலையில் கண்ட்ரோல் இல்லாவிட்டால், பண வசதியுள்ள ஒரு சிலர் தானியங்களை அதிக விலைக்கு வாங்கத்தானே பார்ப்பார்கள்? ஆசை பிடித்த வியாபாரிகள் பதுக்கி வைக்கத்தானே முயல்வார்கள்? — பெரும்பாலான ஏழை மக்களுக்குத் தானியம் கிடைக்காமல்தானே போகும்! அதனால் பட்டினியும் பஞ்சமும் ஏற்படத்தானே செய்யும்?—இந்த விபரீதங்களை யெல்லாம் தடுக்க வேண்டாமா? தடுப்பதற்கு வேறுவழி என்ன இருக்கிறது?—இவை அனைவருக்கும் தெரிந்து தானிருக்கின்றன. அறிவுக்கு உகந்ததாகவும் இருக்கின்றன. விவாதித்து நிலை நாட்டக் கூடியவையாகவும் இருக்கின்றன.

ஆனாலும், பொது மக்கள்,—பொது மக்களில் முக்காலே மூன்று வீசம் பேர், — கண்ட்ரோலை ஏன் வெறுக்கிறார்கள்? இவற்றை நடத்திவைக்கும் காங்கிரஸ் மந்திரி சபைகளையும் காங்கிரஸ் ஸ்தாபனத்தையும்கூடச் சேர்த்து ஏன் சபிக்கிறார்கள்?

காரணம் இதுதான்:—கண்ட்ரோலை நடத்தி வைக்கும் அதிகாரிகள் கையாளும் பழைய அதிகார வர்க்க தோரணைதான்!

இந்தியாவில் பிரிட்டிஷ் சர்க்காரின் யதேச்சாதிகார ஆட்சி நடந்த காலத்தில் அதிகார வர்க்கத்தின் அகந்தையைப்பற்றிக் காங்கிரஸ் வாதிகள் வாய் கிழியப் பேசினார்கள்.

"எங்களுக்கு பிரிட்டிஷ் ஆட்சியின் மீதுகூட அவ்வளவு வெறுப்பு இல்லை; ஆனால் இந்த அதிகார வர்க்கம் செய்யும் கொடுமைகளைத்தான் சகிக்க முடியவில்லை!" என்றார்கள்.

ஆனால் இன்றைய நிலைமை என்ன? நாட்டிலும் நகரத்திலும் நாலா திசைகளிலும் என்னத்தைப் பார்க்கிறோம்?

அதிகாரவர்க்க அமுல் ஒன்றுக்குப் பத்து மடங்கு அதிகமாகியிருப்பதைப் பார்க்கிறோம்.

பொது ஜனத்தின் சிண்டு (குடுமி அல்லது உச்சிக்குடுமி அல்லது கிராப்பு மயிர்) அதிகார வர்க்கத்தின் கையில் வகையாகச் சிக்கிக் கொண்டிருப்பதைப் பார்க்கிறோம்.

பிரிட்டிஷ் ஆட்சியின் போது இருந்ததைக் காட்டிலும் அதிகார வர்க்க அமுலும் (சில சமயம் கொடுமையும் அநீதியும்) பன்மடங்கு அதிகமாகியிருப்பதைப் பார்க்கிறோம்.

கிராமத்து மக்களை, — மரியாதையுள்ள ஜனங்களை,—உணவு உற்பத்தி செய்யும் விவசாயிகளை,—குடியானவர்களை, மிராசுதார்களை,—சின்னஞ் சிறு அதிகாரவர்க்க குட்டி தேவதைகள் அவமரியாதையாக நடத்தவும் அநீதி செய்யவும் கொடுமைப்படுத்தவும் வசதி ஏற்பட்டிருப்பதைக் காண்கிறோம்.

இதற்கு முக்கிய காரணமாயிருப்பது கண்ட்ரோல் முறைதான். கிராமங்களில் உள்ள விவசாயிகளின் வீடுகளில் புகுந்து சட்டிப்பானைகளைச் சோதனை போட்டு அரைப்படி நெல்லைக் கொண்டு போகக்கூடிய அதிகாரம் உத்தியோகஸ்தர்களுக்கு இருப்பது தான் காரணம். இம்மாதிரியே சமூகத்திலுள்ள சகல வகை ஜனங்களும் ஏதாவது ஒருவிதத்தில் சர்க்கார் அதிகாரிகளைக் கண்டு நடுநடுங்க வேண்டியிருப்பதுதான் காரணம்.

பிரிட்டிஷ் ஆட்சியைக் காட்டிலும் சுயராஜ்யத்தின் கீழ் அதிகார வர்க்கக் கொடுமை அதிகமாயிருக்கும்போது, சுயராஜ்யத்தை யார் வாழ்த்துவார்கள்?

"நேரு நல்லவர்தான்; பிரஸாத் உத்தமர்தான்; ஆனால் எங்கள் கஷ்டம் அவர்களுக்கு எங்கே தெரியப் போகிறது?" என்றுதான் ஜனங்கள் சொல்லுவார்கள். "கண்ட்ரோல் தொலையாதா? அதிகாரவர்க்க ஆட்சி ஒழியாதா? சுயராஜ்யத்தின் பலன் இது தானா?" என்றுதான் பேசுவார்கள்.

மாபெருந் தலைவர்கள் வரும்போது ஜனங்கள் பக்தியுடன் வந்து மொய்த்துக் கொள்வார்கள்; ஜய கோஷமும் செய்வார்கள்; அந்த நேரத்துக்கு மற்றக் கஷ்டங்களை யெல்லாம் ஜனங்கள் மறப்பார்கள்.

ஆனால் அந்தத் தலைவர்கள் அப்பால் போனதும் பழையபடி தங்கள் தினசரி வாழ்க்கைத் தொல்லைகளை நினைத்துக் குறை கூறத்தான் செய்வார்கள்.

நேரு, படேல், ராஜாஜி, ராஜேந்திரரின் பக்தி எத்தனை நாளைக்குத்தான் மக்களைப் பொறுமையுடன் வைத்திருக்கக் கூடும்? ஒரு நாளைக்குப் பிய்த்துக் கொண்டு புறப்பட்டுவிட மாட்டார்களா?—இதை நினைத்து இராஜ்ய நிர்வாகிகள் மக்களின் குறைகளுக்குப் பரிகாரம் தேட முற்பட வேண்டும்.

* * *

இதோ உதாரணத்துக்கு ஒரு கடிதத்தைப் படித்துப் பாருங்கள்:—

"தஞ்சாவூர் ஜங்ஷனில், ரேஷன் அதிகாரிகள் என்று சொல்லப்படும் F.S.O. T.S.O. போலீஸ் எல்லாமாகச் சேர்ந்து நடத்தும் அநியாயத்தைக் காருண்ய கவர்ன்மெண்டார் பார்வைக்குக் கொண்டுபோனால் தேவலை. ஒரு படி அரிசியைக் கண்டு பிடிப்பதற்காகப் பிரயாணிகளின் பெட்டி, படுக்கை எல்லாவற்றையும் அவிழ்க்கச் சொல்லுவதும் அதிகப் பிரசங்கித்தனமாகப் பேசுவதும், முக்கியமாய் அவர்கள் நடத்தும் அங்காரமும், பேர்கம் சகிக்க முடியவில்லை. பின்னை பெற்ற பேத்திக்கு ஒரு படி பழைய அரிசியை ஒரு பாட்டி மடிசஞ்சியில் கொண்டுபோனால், அந்தப் பாட்டியம்மாளின் கையைப் பிடித்து, அவளுடன் குஸ்தி போட்டு அந்த மடிசஞ்சியைக் கொண்டு போவதில் ஒரு கான்ஸ்டேபிள் திருப்தி அடைகிறார். இப்படிப் பிடித்த அரிசியும் ஏழைகளுக்குக் கிடைப்பதில்லை. ஆனால் மூட்டை மூட்டையாக அரிசியைக் கொண்டு போய் பிளாக் மார்க்கெட் வியாபாரம் செய்வது தெரிவதில்லை. இவைகளைப் பார்த்து என் மனம் மிகவும் வேதனையடைகிறது. அதைத் தங்களுக்குத் தெரியப்படுத்தி எழுதலாமாவென யோசிப்பதுண்டு. இதைப்போல் எவ்வளவோ. எழுதப் போனால் காகிதம்தான் செலவாகும். பாவம், தங்களுக்கும் சிரமம். ஆகையால் இத்துடன் நிறுத்திக் கொள்கிறேன்."

மேற்படி கடிதம் எழுதியவரின் பெயரையும் விலாசத்தையும் நாம் கொடுக்கவில்லை. அதற்குக் காரணம் உண்டு. முன்னர், திருநெல்வேலி ஜில்லா விட்டலபுரத்தைச் சேர்ந்த ஒரு விவசாயி மிராசுதார்—பிரபல காங்கிரஸ் வாதி—நம் வட்டமேஜைக்குக் கொள்முதல் கொடுமையைப் பற்றி ஒரு கடிதம் எழுதியிருந்தார். அதன் பலன் என்ன ஆயிற்று? "நீ பத்திரிகைக்குக் கடிதம் எழுதத் துணிந்தாயா? பார்க்கிறோம் ஒரு கை!" என்று குட்டி அதிகாரிகள் அவர்மீது மேலும் பாய்ந்தார்கள். எனவே, அந்த விவசாயி பத்திரிகைகளுக்குக் கடிதம் எழுதுவதைக் கைவிட்டு, மேல் அதிகாரிகளுக்கும் மந்திரிகளுக்கும் விண்ணப்பம் போட்டார். விண்ணப்பத்தின் பலன் என்ன ஆகப் போகிறதோ, தெரியாது.

ஆகவே, மேலேயுள்ள கடிதம் எழுதியவருக்கும் நம்மால் தொல்லை நேர வேண்டாம் என்று அவருடைய பெயர், விலாசத்தை நாம் வெளியிடவில்லை.

* * *

ஆகவே, "நாம் பெற்றிருப்பது சுயராஜ்யந்தான்!" என்ற உணர்ச்சி மக்களுக்கு ஏற்பட வேண்டுமானால் அதிகார வர்க்கத்தின் மனப்பான்மை அடியோடு மாறவேண்டும்.

நாட்டின் தற்போதைய நிலையில் விவசாயத்தில் ஈடுபட்டு உணவு உற்பத்தி செய்யும் புண்ணியவான் பரமோபகாரியாவான். அவனிடம் தானியக் கொள்முதல் செய்ய வேண்டுமானால், தயவாய்க் கேட்க வேண்டும்; கெஞ்சிக் கேட்க வேண்டும்; அவசியமானால் தோப்புக்கரணம் போட்டுக்கூட வேண்டிக் கொள்ள வேண்டும். அதைவிட்டு விவசாயியின் பேரில் அதிகார அமுலைச் செலுத்துவது அநீதியும் அக்கிரமும் இராஜதந்திர சூனியமும் ஆகும்.

அதிகாரிகள் தங்கள் கடமையைக் கட்டாயம் செய்ய வேண்டியதுதான்; கண்டிப்பாகச் செய்ய வேண்டியது தான். ஆனால் தாங்கள் ஒவ்வொருவரும் பொதுஜன ஊழியர்கள், சுயராஜ்ய ஜனநாயக ஊழியர்கள் என்பதை ஒரு கணமும் மறக்கக் கூடாது.

பெரிய மனிதர்களுக்குச் சலாம் போட்டுவிட்டு, எம். எல். ஏ.க்களைச் சரிக்கட்டிவிட்டு, ஏழை எளியவர்களை வதைக்கக் கூடாது.

இதை நம் சுயராஜ்ய அரசியலை நடத்தும் மந்திரிகள் அதிகார வர்க்கத்தினருக்கு இடைவிடாமல் எடுத்துச் சொல்லி வற்புறுத்தி அமுலுக்குக் கொண்டு வரவேண்டும்.

கண்ட்ரோல் முறையும் ரேஷன் முறையும் இரட்டைப் பிறவிகள். ஒன்றை யொன்று தழுவி நிற்கின்றன. இந்த இரு முறைகளினால் நாட்டு மக்கள் அனைவரும் அதிருப்தி கொண்டு புகார் செய்ய இடம் ஏற்படுகிறது.

1. நகர வாசிகளும் பட்டணங்களில் வசிப்பவர்களும் ரேஷன் போதவில்லை என்று குறைப்படுகிறார்கள். பதினாறு அவுன்ஸ் பன்னிரண்டு அவுன்ஸ் ஆகி எட்டு அவுன்ஸ்—ஏழு, ஆறு அவுன்ஸ் ஆவதைக் குறித்து ஓயாமல் இடித்துரைக்கிறார்கள்.

2. கிராம வாசிகளுக்குப் பட்டண வாசிகளைக் காட்டிலும் ரேஷன் குறைவாக அளிக்கப்படுகிறது. அதுவும். ஒழுங்காய்க் கிடைப்பதில்லை. அவர்களுடைய அதிருப்தியும் புகாரும் அதிகமாக இருப்பது இயல்பு.

3. தானிய உற்பத்தி செய்யும் விவசாயிகளோ, "எங்களுக்கு விவசாயத்திற்கு வேண்டிய கருவிகள் எல்லாம் ஒன்றுக்கு நாலு மடங்கு விலை விற்கின்றன. நாங்கள் பாடுபட்டு உற்பத்தி செய்யும் தானியத்தை மட்டும் சொற்ப விலைக்குக் கொள்ளை கொண்டு போகிறார்களே! அதிலும், குட்டி அதிகார தேவதைகள் எங்களைப் படுத்தி வைக்கும் பாடு சகிக்க முடியவில்லையே! இது தானா சுயராஜ்யம்?" என்று கதறுகிறார்கள்.

இவ்விதம் எல்லாப் பக்கங்களிலும் அதிருப்தியை வளர்க்கும் கண்ட்ரோல்-ரேஷன் முறையை ஒரு வழியாக ஒழிக்க முடியாவிட்டாலும், நல்லபடியாகத் திருத்தியமைக்க வேண்டியது மிகவும் அவசியம்.

இதைப்பற்றி நம் காங்கிரஸ் மந்திரிகள் இப்போது யோசிக்கத் தொடங்கியிருப்பது சிறிது திருப்தியளிக்கிறது. உணவு மந்திரி கனம் ரோச் விக்டோரியா "கிராமாந்திர ரேஷனை எடுத்து விடும்" யோசனை இருப்பதாக சென்னைச் சட்டசபையில் தெரிவித்தார். பம்பாயில் பல மாகாண உணவு மந்திரிகளும் கூடி, (நாம் இத் தலையங்கம் எழுதும்போது) யோசித்து வருகிறார்கள். யோசிக்கட்டும்; நன்றாய் யோசிக்கட்டும்; மூளை வறளும் வரையில் யோசிக்கட்டும். யோசித்து ஏதேனும் நல்ல முடிவுக்கு வரட்டும்.

நம்முடைய யோசனையை—வெகு நாளாக நாம் சொல்லி வரும் யோசனையை—இச்சமயத்தில் ஞாபகப் படுத்தி வைக்கிறோம்.

பற்றாக்குறை அளவுக்கு, இரண்டு மூன்று வருஷங்களுக்கு, வெளிநாடுகளிலிருந்து உணவுப் பொருளைச் சர்க்கார் இறக்குமதி செய்ய வேண்டும். அரிசி, அரிசி நொய், கோதுமை, சோளமா,—எது கிடைக்கிறதோ அதை இறக்குமதி செய்ய வேண்டும்.

பட்டணங்களில் உள்ளவர்களுக்கு மட்டும் ரேஷன் ஏற்பாட்டை வைத்து, மேற்படி இறக்குமதி தானியத்தை, அவர்களுக்கு வழங்கவேண்டும்.

கிராமாந்திரங்களில், பஞ்சம் ஏற்படும் என்ற பயமுள்ள பிரதேசங்களில் மட்டும், நியாய விலை தானியக் கடைகள் ஏற்படுத்த வேண்டும்.

உள்நாட்டில் விளையும் நெல் முதலிய தானியங்களுக்குக் கொள்முதல், விலைக் கட்டுப்பாடு, ஒன்றும் உதவாது.

இதன்படி முதலில் கொஞ்ச நாள் தானியங்கள் அதிக விலைக்கு விற்கலாம். பிற்பாடு, சரியான அளவுக்கு விலை வாசிகள் தானே இறங்கிவிடும்.

விவசாயிகள் அதிகார வர்க்கத்தின் கொள்முதல் கொடுமையின் பீதியிலிருந்து விடுபட்டு உற்சாகத்துடன் தானிய உற்பத்தியை அதிகரிப்பார்கள். சீக்கிரத்திலேயே விளைவும் அதிகமாகி விலைவாசிகளும் ஒரு சரியான நிலைக்கு வந்து விடும்.

இந்த முறையை இலங்கையில் அனுசரித்து நல்ல பலன் கண்டு வருகிறார்கள். மக்களுக்கு உணவு விஷயத்தில் அதிருப்தியே யில்லாமல் செய்திருக்கிறார்கள். விவசாயிகளுக்கு உற்சாகமும் அளித்திருக்கிறார்கள்.

இந்த முறை இந்தியாவிலும் பலன் தரும் என்பதில் சந்தேகமில்லை. ஆனால் இதைப் படிப்படியாக அமுலுக்குக் கொண்டு வரவேண்டியிருக்கலாம்.

அது வரையில், இடைக் காலத்தில், அதிகார வர்க்கத்தார் தங்கள் மனோபாவத்தை மாற்றிக் கொள்ள வேண்டியது மிகவும் அவசியம். மக்களிடம் அதிகாரிகள் போகும்போது எஜமானர்களிடம் போவதுபோல் போக வேண்டும். இந்த அடிப் படையான, இன்றியமையாத மனமாறுதலை, ஜனநாயக மந்திரிகள் கட்டாயமாக ஏற்படுத்தித் தரவேண்டும்.

அப்போதுதான் மக்கள் சுயராஜ்யத்தின் பலனை அனுபவிக்கும் உணர்ச்சி பெறுவார்கள். சுதந்திரக் காற்றைச் சுவாசித்து மகிழ்வார்கள்.

# பாரீஸ்

*Parry's*

அஸோஸியேடட் பிரிட்டிஷ் ஆயில் இன்ஜின் கம்பெனிகளோடு சேர்ந்து விவசாயத்திற்கும் மற்றும் தொழில்களுக்கும் தேவையான

## டீஸல் இன்ஜின்களின்

# பொருட்காட்சி

ஒன்றை

## டிஸம்பர் 19-ம் தேதி முதல் 23-ம் தேதி வரையில்

### 36, மௌண்ட் ரோடில் (ஸ்பென்ஸர் கம்பெனிக்கு எதிரில்) நடத்துகிறார்கள்

பொருட் காட்சி நேரம் :
19-ம் தேதி: மாலை 4 முதல் 7 மணி வரை
20உ முதல் 23உ வரை : மாலை 2 முதல் 7 மணி வரை

புகழ் வாய்ந்த பெட்டர், பெட்டர்-பீல்டிங், கிர்லாஸ்கர்-பெட்டர், மெக்லாரன், மிர்லீஸ் போன்ற டீஸல் இன்ஜின்கள் இயங்குவதை இங்கிலாந்திலிருந்து இதற்கென்றே வந்துள்ள நிபுணர்கள் நடைமுறையில் செய்து காட்டுவார்கள்.

அனைவரும் வருக!

Petter | PETTER-FIELDING | Mirrlees | Kirloskar | McLAREN

ads


கண் திறப்பு
இவர்களுடைய கண்கள் திறந்துவிட்டன.....
இவருடைய கண்கள் திறக்குமா?...
சமாதான வேண்டுகோள்

# சுப்புவின் மாற்றம்

சபரி

அன்று விஜயதசமி. வீட்டில் கறிகாய் எதுவும் கிடையாது. ராமசுப்பு பெட்டியைத் திறந்து பார்த்தான். ஒன்றரை ரூபாய் இருந்தது. அதை எடுத்துப் பையில் போட்டுக் கொண்டு கடைக்குப் புறப்பட்டான்.

***

சுப்பு ஒரு ரசிகன். முக்கியமாக சாப்பாட்டில் அவன் பெரிய ரசிகன். வாழ்க்கை எடுத்ததே சாப்பிடுவதற்காகத்தான் என்று சொல்லுவதற்குக் கூடத் தயாராக இருப்பவன் அவன். அவனுடைய வீட்டுச் சாப்பாடு ஒரு விருந்துபோல் இருக்கும். செலவைப் பற்றி அவன் கொஞ்சங்கூடக் கவலைப்படவே மாட்டான். பல வருஷங்களுக்கு முன் ஒரு முறை அவனுடைய நண்பன் கோபாலன் அவன் வீட்டில் காப்பி சாப்பிட்டபோது அப்படியே திகைத்துப் போய் விட்டான். அத்தகைய காப்பியை அவன் சாப்பிட்டதே கிடையாது. அவன் சுப்புவைப் பார்த்து, "அடே, சுப்பு! உனக்கு ஒரு யோசனை சொல்லுகிறேன். உனக்குச் சம்பள உயர்வு வேண்டுமானால் பேசாமல் உன் முதலாளியை அழைத்துக் கொண்டு வந்து அவருக்கு ஒரு கப் காப்பி கொடு, போதும்" என்றான்.

அதெல்லாம் பழைய கதை. பத்து வருஷத்துக்கு முந்திய விஷயம். இப்போது அந்த மாதிரியெல்லாம் நடக்குமா! கத்தரிக்காய் விலையும் வெண்டைக் காய் விலையும் ஒன்றுக்கு நான்கு மடங்கு உயர்ந்து விட்டது. ஆனால் சுப்புவின் சம்பளமோ வருஷத்துக்கு ஒன்றரை ரூபாய் வீதம்தான் உயர்ந்து கொண்டு வந்தது. அவன், அவன் மனைவி, தாய், ஒரு குழந்தை— இத்தனை பேரும் எண்பது ரூபாய்க்குள் வாழ்க்கை நடத்தியாக வேண்டும். காலந் தள்ளுவதே பெருங் கஷ்டமாக இருக்கும் இந்த நிலைமையில் ரசித்துச் சாப்பிடுவதற்கு எங்கே போவது!

***

"என்ன வேண்டும், ஸார்!" என்று கேட்டார் காய்கறிக்கடை கந்தசாமி நாயுடு.

சுப்பு ஒருமுறை கடை முழுவதையும் கண்ணைச் சுழற்றிப் பார்த்தான். பிறகு "பத்துப் பலம் கத்தரிக்காயும் பத்துப்பலம் வெண்டைக் காயும் கொடுங்கள்" என்றான்.

நாயுடு விழுந்து விழுந்து சிரிக்கத் தொடங்கினார். சுப்புவுக்கு அவமானமாக இருந்தது. அவர் என்னத்துக்காகச் சிரிக்க வேண்டும் என்று அவனுக்கு விளங்கவில்லை.

"விஷயம் தெரியாதா உங்களுக்கு!" என்றார் அவர்.

"என்ன!"

"காய்கறி விலையெல்லாம் குறைந்து விட்டது ஸார்!—நீங்கள் இன்னும் கத்தரிக்காயும் வெண்டைக்காயும் கேட்கிறீர்களே; இன்று புத்தம் புதிசாக வந்த முட்டைக்கோஸும் தக்காளியும் இருக்கிறது. வாங்கிக்கொண்டு போங்கள். விலை சல்லிசாகக் கொடுக்கிறேன்."

"தக்காளி வீசை என்ன விலை!"

"ஒரு வீசை தக்காளி எட்டே அணாத்தான். ஒரு வீசை முட்டைக் கோஸ் ஆறே அணாத்தான். எவ்வளவு வேண்டும் உங்களுக்கு!" என்று சொல்லிவிட்டுத் தராசை எடுத்து நிறுப்பதற்குத் தயாரானார் நாயுடு.

"என்ன!" என்று கேட்டுவிட்டுச் சற்று நேரம் சிலைபோல நின்றான் சுப்பு. அப்போது ஒரு அணுகுண்டு அவன் பக்கத்தில் விழுந்திருந்தால் கூட அவனுக்கு அவ்வளவு திகைப்பும் ஆச்சரியமும் ஏற்பட்டிராது. அவனால் இதை நம்பவே முடியவில்லை.

"என்ன ஸார் யோசிக்கிறீர்கள்! கத்தரிக்காயை விட்டுவிட இன்னும் மனம் வரவில்லையாக்கும்! இப்படிக் காசை மிச்சம் பண்ண ஆரம்பித்து விட்டீர்களே!" என்றார் நாயுடு.

"இல்லை, இல்லை, எவ்வளவு வாங்கலாம் என்று யோசிக்கிறேன். அவ்வளவுதான்— பத்துப் பலம் தக்காளியும் பத்துப் பலம் முட்டைக் கோஸும் கொடுங்கள்" என்றான் சுப்பு.

"இவ்வளவுதானா!" என்று சொல்லிவிட்டுப் பத்துப்பலம் தக்காளியையும் பத்துப் பலம் முட்டைக்கோஸையும் அலட்சியமாக நிறுத்துப் போட்டார் நாயுடு.

"இன்னும் ஏதாவது வேண்டுமா, ஸார்!— முழுத் தேங்காய் ஒன்றரையணாத்தான்—"

"முழுத்தேங்காய் ஒன்றரையணா!—சுப்பு மீண்டும் திகைத்தான்.

"சரி, ஒரு தேங்காயும் கொடுங்கள்" என்றான்.

நாயுடு ஒரு பெரிய தேங்காயாகப் பார்த்துப் பொறுக்கியெடுத்துக் கொடுத்தார்.

மூன்றும் சேர்ந்து மொத்தம் ஐந்து அணாத் தான் ஆயிற்று!

சுப்பு பணத்தை எடுத்து நாயுடுவிடம் கொடுக்கப் போனான்.

"என்ன ஸார், அவ்வளவு தானா! நல்ல நாளும் கிழமையுமாக நெய் வாங்கிக் கொண்டு போகவில்லையா! விஜயதசமிக்காக மாயவரத்திலிருந்து நெய் வரவழைத்திருக்கிறேன். நல்ல நெய், வெண்ணெயைக் காய்ச்சி உருக்கின நெய். விலை ஒரு வீசை நாலு ரூபாய் தான்."

சந்தேகம் இல்லை; உலகத்தில் ஏதோ ஒரு பெரிய புரட்சி உண்டாகிவிட்டது. சிறு வயதில் தான் படித்த 'ரிப்வான் விங்கிள்' கதை ஞாபகம் வந்தது சுப்புவுக்கு. ரிப்வான் விங்கிள் பல ஆண்டுகள் வரை ஒரே இடத்தில் படுத்துத் தூங்குகிறான். எழுந்து பார்க்கும் போது தன்னைச் சுற்றிலும் நிகழ்ந்துள்ள மாறுதல்களைக் கண்டு அதிசயிக்கிறான். சுப்புவின் நிலைமையும் அந்த மாதிரியாகவே இருந்தது.




கச்சேரி செய்த பாகவதர் (சிஷ்யரிடம்):—இன்றைக்கு என் கச்சேரி எப்படி இருந்தது?

பிரதம சிஷ்யன்:—உங்கள் பின்னாலே சுருதியில் வைத்துப் போய் இருந்துவிட்டேன். அதனால் கச்சேரியைக் கவனிக்க முடியவில்லை.

---

"எவ்வளவு ஸார் வேண்டும்!"

"நான் பாத்திரம் எதுவும் கொண்டுவரவில்லை. அப்புறம் வந்து வாங்கிக் கொள்கிறேன்."

"பரவாயில்லை, ஸார்! இதோ இந்தப் புட்டியில் போட்டுக் கொடுக்கட்டுமா!" என்று தன்னருகே இருந்த ஒரு புட்டியை எடுத்துக் காட்டினார் நாயுடு.

புட்டி சுத்தமாக இருந்தது. "சரி, அதிலேயே கொடுங்கள். கால் விசை கொடுங்கள். அப்புறம் அதிகமாக வாங்கிக் கொள்ளுகிறேன்" என்றான் கப்பு.

நாயுடு கால்விசை நெய்யை நிறுத்துப் புட்டியில் போட்டுக் கொடுத்தார். கப்பு அவருக்குக் கொடுக்க வேண்டிய பணத்தைக் கொடுத்து விட்டுப் புறப்பட்டான்.

* * *

சுப்புவின் உள்ளத்திலே குதூகலமும் உற்சாகமும் பொங்கித் ததும்பின. அவன் அடிக்கடி பையைத் திறந்து திறந்து பார்த்தான். தக்காளிப் பழம் செக்கச் செவேலென்று கண்ணைப் பறிக்கக் கூடியதாக இருந்தது. முட்டைக் கோஸ் தளதளவென்று அப்போது தான் நிலத்திலிருந்து பிடுங்கிக் கொண்டு வந்தது போல இருந்தது. நெய் வாசனை 'கும்' மென்று வந்து கொண்டிருந்தது. தக்காளி ரஸம் வைத்து முட்டைக் கோஸ் பொரியல் வைக்கலாம். இரண்டும் அவனுக்கு ரொம்பப் பிடித்தமானவை. அப்புறம்,—எப்போதோ ஒரு முறை வாங்கிய சேமியா கொஞ்சம் வீட்டில் இருக்கிறது. அதைக் கொண்டு கொஞ்சம் பாயஸம் வைக்கச் சொல்லலாம். தோட்டவிலிருந்து இரண்டு கப் தயிரையும் வரவழைத்து விட்டால்...... கேட்க வேண்டியதில்லை; முதல் தரமான சாப்பாடாகிவிடும்! விஜயதசமி என்றால் இப்படிப்பட்ட விஜயதசமி அல்லவா வேண்டும் கப்புவின் நாக்கில் நீர் ஊறிற்று. எவ்வளவு நாளாகிவிட்டது நல்ல சாப்பாடு சாப்பிட்டு!

மீண்டும் ஒரு முறை பையைத் திறந்து பார்த்தான். நெய் வாசனை 'கமகம' வென்று வந்தது. நல்ல நெய் போலிருக்கிறது: ஒரு கை நிறைய வாங்கி அப்படியே சாதத்தில் போட்டுக் கொள்ள வேண்டும்.

'கர்ர்' என்று பசியெடுத்தது.

அவன் வேகமாக அடி எடுத்து வைத்து நடந்தான். கடையில் ஒரு தெம்பு உண்டாயிற்று அவனுக்கு. தெருவில் எதையும் அவன் கவனிக்கவே இல்லை. அவன் கண்ணுக்கு முன் தக்காளி ரஸமும் முட்டைக் கோஸ் பொரியலும் பாயஸமும்தான் காட்சியளித்தன. அடடா!......

இதையெல்லாம் பார்த்தால் அவள் எவ்வளவு ஆச்சரியப்படுவாள்!—அவளிடம் உண்மையைச் சொல்லவே கூடாது ஆச்சரியத்தில் மூழ்க வைக்க வேண்டும் அவளை.

இதோ வந்தாகி விட்டது. வாசலில் அடியெடுத்து வைத்தான். இன்னும் உள்ளே போகவில்லை. அதற்குள் அவனுக்குப் பரபரப்புத் தாங்கவில்லை. "இந்தாடி!" என்றான் உரத்த குரலில். அந்தக் குரலில் தான் எவ்வளவு ஆனந்தம்!

* * *

"என்ன இது, மணி பன்னிரண்டு ஆகிவிட்டது. இன்னுமா தூக்கம்! நன்றாயிருக்கிறது! எழுந்து சாப்பிடுங்கோ!" என்றாள் சண்பகம்.

கப்பு திடுக்கிட்டு விழித்தான். தான் கண்டது கனவு என்பதைப் புரிந்து கொள்ளச் சற்று நேரமாயிற்று அவனுக்கு. ஒரே ஏமாற்றமாக இருந்தது அவனுக்கு. ஆஹா! அந்த அற்புதமான நெய் எங்கே! தக்காளிப் பழம் எங்கே! முட்டைக் கோஸ் எங்கே!—எல்லாம் கனவுதானா!

ஆனால் பசி மாத்திரம் 'கர்ர்' என்று வயிற்றைக் கிள்ளிற்று.

"என்ன சமையல் பண்ணியிருக்கிறாய்!" என்று கேட்டான்.

"வத்தல் குழம்பு வைத்துக் கொத்தமல்லித் துவையல் பண்ணியிருக்கிறேன்" என்று பதில் வந்தது.

கப்புவின் பசி பறந்து விட்டது!

"இனிமேல் நல்ல சாப்பாடு சாப்பிடுவதாயிருந்தால் கனவிலேதான் சாப்பிட வேண்டும் போலிருக்கு!" என்று முணுமுணுத்தது அவன் வாய்.

பாவம், கனவில்கூட அது அவனுக்குக் கிடைக்கவில்லையே!

# கடவுளின் பிரதிநிதி

ரா. வீ.

அன்று ஒரு நாள் ஞானம் நல்ல நித்திரையில் ஆழ்ந்திருந்தது. கடவுள் அதற்குக் கனவிலே தரிசனம் அளித்து, "ஏ ஞானமே! நான் உன்னை என் பிரதிநிதியாக மண்ணுலகத்துக்கு அனுப்ப உத்தேசித்திருக்கிறேன். நீ அங்கே சென்று உலகத்தை மறுபடியும் புதுமுறையில் நிர்மாணம் செய்!" என்று ஆக்ஞாபித்தார்.

ஞானம் விழித்தெழுந்தது. உலகம் காடாந்தகாரத்தில் மூழ்கியிருப்பதையும் மானிட ஜாதி அந்தக் கும்மிருட்டில் வழி தெரியாமல் தட்டுத் தடுமாறி நாசத்தை நோக்கி முன்னேறிக் கொண்டிருப்பதையும் கண்டது. கடவுளின் பிரதிநிதி என்றால் கீழ் நோக்கிச் சென்று கொண்டிருக்கும் மானிட ஜாதியை நல்வழிக்குத் திரும்பும்படி செய்ய வேண்டியது கடமை அல்லவா? இருளிலிருந்து வெளியேற்றி வெளிச்சத்தில் கொண்டு வந்தால் தானே மானிட ஜாதி தன் நிலைமையை உணர முடியும்? மானிட ஜாதியின் மாண்பு மிக்க தலைவனாகி அதன் சத்துருவுடன் போர் தொடுத்தால் தானே, எண்ணிய கருமம் சித்திபெறும்?

ஆகவே, அது இரு கண்களையும் நன்றாகக் கசக்கி விட்டுக் கொண்டு எழுந்து சென்று நாற்சந்தியில் போய் நின்றது. பிறகு அவ்வழியே போவோர் வருவோர்களையெல்லாம் கூப்பிட்டு, "ஏ மண்ணுலக வாசிகளே! நான் ஆண்டவனது தூதன்; எல்லாம் வல்ல அல்லா அனுப்பிய 'பைகம்பர்'. பகவானது பிரதிநிதி. உங்களை யெல்லாம் உத்தாரணம் செய்வதற்கென்றே நான் இங்கே வந்திருக்கிறேன். அது சம்பந்தமாக உங்களிடம் ஒரு விஷயம் சொல்ல விரும்புகிறேன்" என்றது.

ஆனால் யாருமே அதன் சொல்லைக் காதில் வாங்கிக் கொள்ளவில்லை. சிலர் அதற்குப் பைத்தியம் என்றே பட்டம் சூட்டினர். பெரும்பாலானவர்கள் "இது நம் தர்மத்துக்கு முற்றிலும் விரோதமாக உபதேசம் செய்கிறது. இதன் சொல்லை நம்பாதீர்கள்! இதை அடித்து விரட்டி விடுங்கள்!" என்று கூறினர்கள். அதைக் கேட்டு அங்கிருந்த சின்னஞ்சிறு குழந்தைகள் அதன்மேல் கல்லை எடுத்து விட்டெறிய ஆரம்பித்து விட்டனர்.

கடைசியில் தொந்தரவு தாளாமல் ஞானம் வெளிச்சம் புக முடியாத இருட்டுச் சந்து ஒன்றில் புகுந்து உட்கார்ந்து கொண்டு பலத்த யோசனையில் ஈடுபட்டது. மானிட ஜாதிக்குப் பெரிய துரோகி இந்தத் தர்மம் தான். ஆகவே இதை எதிர்த்துப் போர் புரிந்து பூண்டோடு ஒழித்துத் தொலைத்தால் தான் மானிட ஜாதி கடைத்தேற முடியும் என்ற முடிவுக்கு வந்தது.

கொஞ்சதூரம் சென்றதும் அதன் காதில் யாரோ ஒரு பெண்ணின் அழுகைச் சத்தம் கேட்டது. உடனே அது அழுகை வரும் திசையை நோக்கி நடந்தது. சில கஜதூரம் செல்வதற்குள்ளேயே, கட்டாந்தரையில் ஒரு பெண் படுத்திருப்பதையும், அவளுக்குப் பக்கத்தில் எலும்பும் தோலும் ஒட்டிப்போன ஒரு குழந்தை கிடப்பதையும் கண்டது. அந்தக் குழந்தை மரித்துத் தான் கிடந்ததோ, அல்லது மூர்ச்சையுற்றுத்தான் கிடந்ததோ, தெரியாது! எனினும் அதன் உடலில் எவ்விதமான துடிப்பையும் காணோம்!

"அம்மா! ஏன் அழுகிறாய்?" என்று அறிவு அப்பெண்ணை அணுகிக் கேட்டது.

"நான் அன்னிய மதத்தினன் ஒருவனை மணம் செய்து கொண்டு அவனுடன் வாழ்க்கை நடத்தி வந்தேன். ஜனங்கள் இந்த விஷயம் தெரிந்ததும் அவனைக் கொன்று போட்டு விட்டார்கள். அத்துடன் அவர்கள் நிற்கவில்லை. என்னையும் அடித்துத் துரத்தி விட்டார்கள். என் இந்தக் குழந்தை பசியினால் வாடிக் கொண்டிருக்கிறது!" என்றாள் அந்தப் பெண்.

அதைக் கேட்டதும் அறிவின் முடிவு இன்னும் உறுதிப்பட்டது. "என்னுடன் வா, அம்மா! நான் உன்னைக் காப்பாற்றுகிறேன்!" என்று அவளுக்கு அது அபய ஹஸ்தம் கொடுத்தது. பிறகு அந்தப் பெண்ணையும் தன்னுடன் கூடவே அழைத்துக் கொண்டு புறப்பட்டது.

அறிவு தர்மத்துக்கு எதிரிடையாகப் பிரசாரம் செய்யத் தொடங்கியது. "தர்மம் என்பதெல்லாம் வெறும் ஜகப்புரட்டு. வீண் பகட்டுக்கள் வாய்ந்த கட்டுப்பாடு. பரமாத்மா ஒருவன் தான் எந்தக் கட்டுப்பாட்டுக்கும் அடங்காதவன்; அப்பாற்பட்டவன். தர்மத்துக்கும் மேலானவன். தர்மம் நம்மை ஒரு



டாக்டர்:— நீங்கள் மூன்று வேளை தான் காப்பி சாப்பிட வேண்டும், அதற்கு மேல் சாப்பிடக் கூடாது என்று சொன்னேனே, அதன்படி மூன்று வேளை தானே காப்பி சாப்பிடுகிறீர்கள்?

காப்பிப் பிரியர்:— இல்லை, ஆறு வேளை சாப்பிடுகிறேன்!

டாக்டர்:— ஏன் அப்படி?

காப்பிப் பிரியர்:— இன்னொரு டாக்டரைக் கேட்டேன். அவரும் மூன்று வேளை காப்பி சாப்பிடச் சொன்னார்!

---

கட்டுப்பாட்டில் கட்டிப் போட்டு விடுகிறது. வான் முறையில் வைத்து வாட்டி விடுகிறது. எதற்கும் குறுக்கே நின்று தடுத்துவிடுகிறது. பரமாத்மாவிடமிருந்தே கூட நம்மைப் பிரித்துவிட முற்படுகிறது. ஆகவே, அது தான் நம் ஜன்ம விரோதி!" என்றது.

"எவன் ஒருவன் சமூகத்தினால் பகிஷ்கரிக்கப்பட்ட பிறருடைய மனைவியைத் தன்னுடன் வைத்துக் கொண்டிருக்கிறானோ, அவன் சொல்லி நாம் எதற்காகக் கேட்க வேண்டும்? அவனைப் போன்ற நீசன், பதிதன், பாவி யாருமே இருக்க முடியாது. சமூகத்தின் நெறி முறையிலிருந்து வழுவினவன் சொல்லைக் கேட்பதாவது?" என்று அந்தக் கூட்டத்தினிடையே ஆட்சேபனை எழுந்தது.

அதைக் கேட்ட மக்கள் ஞானத்தைச் சமூகத்தின் நெறி முறை தவறிய பிரகிருதி என்று தீர்மானித்ததோடு மட்டும் அல்ல; அதைச் சமூகத்திலிருந்தே வெளியேற்றியும் விட்டனர்.

தர்மத்துடன் போர் தொடுப்பதற்கு முன்னால் சமூகத்தை எதிர்த்துப் போராடியாக வேண்டும். சமூகத்தை எதிர்த்து வெற்றி கண்டால்தான் தர்மத்தைக் கண்டிக்க முடியும் என்பதை அறிவு உணர்ந்தது.

"தர்மக் கொடி உடர்க! ஆனால் இந்தப் பூசாரிப் புரோகிதர்களும் 'மூல்லா'க்களும் யார்? நம் வாழ்க்கைப் பாதையை வகுப்பதற்கோ, கட்டுப்படுத்துவதற்கோ இவர்களுக்கு எது உரிமை? வாருங்கள்! நாம் ஒன்று கூடிச் சமூகத்தின் இந்தத் தளைகளைக் களைந்தெறிவோம். சுதந்திரச் சமூகம் ஒன்றைச் சிருஷ்டிப்போம். அப்பொழுது தான் நாம் முன்னேற மார்க்கம் உண்டு" என்றது. இவ்விதமாக அதன் பிரசாரம் மூலைமுடுக்குகளில் எல்லாம் வலுவடைந்தது.

ஒரு நாள் விதேசிச் சர்க்காரின் இரண்டு சிப்பாய்கள் அதைப் பிடித்துக் கைது செய்து இட்டுச் சென்றனர். வகுப்புத் துவேஷத்தை வளர்க்கும் பிரசங்கம் செய்ததாக அதன் மேல் குற்றம் சாட்டிச் சிறைத் தண்டனையும் விதித்தனர்.

தனக்கு அளித்த தண்டனை முடிவடைந்து வெளியே வந்ததும் முதல் காரியமாக அறிவுக்கு, அயல் நாட்டான் மீது ஆத்திரம் பொங்கிக் கொண்டு வந்தது. இந்த அயல் நாட்டான் நம்மை அடக்கி அடிமையாக்க விரும்புகிறான். நம்மை அடிமையாக்கினால் தானே அவனுடைய சுயநலம் பூர்த்தியுறும்? மனித ஜாதி மேன்மையுற வேண்டும் என்றால் அயல் நாட்டினனின் ஆட்சியிலிருந்து விடுபடவேண்டும் பிறகு சமூகத்தை ஒரு கை பார்த்துத் தவிடு பொடியாக்க வேண்டும். அதற்குப் பின்னர்தான்...

அறிவு மறைமுகமாக அயல் நாட்டினன் மீது போர் தொடுக்க முயன்றது.

ஒருநாள் அதனிடம் ஒரு அயலான் வந்தான். அவன் உடுத்தியிருந்த 'காக்கி' உடை தாறுமாறாகக் கிழிந்திருந்தது. அது மட்டும் அல்ல; அந்த உடையில் அரை அங்குலத்துக்கு மேல் அழுக்கு வேறு ஏறியிருந்தது. முகத்தில் சுருக்கம் வேறு கண்டிருந்தது. புசித்துப் பல நாட்கள் ஆகியிருக்க வேண்டும் என்பதை அவனுடைய முகத்தில் ஏற்பட்டிருந்த அந்தச் சுருக்கங்கள் எடுத்துக் காட்டின. ஆனால் குழி

விழுந்து உள்ளே போயிருந்த கண்களில் மட்டும் ஒருவிதமான தீக்ஷண ஒளி சுடர் விட்டுப் பிரகாசித்துக் கொண்டிருந்தது.

"ஐயா! எனக்கு ஏதாவது வேலை கொடுத்து என் ஜீவனத்துக்கு ஒருவழி செய்யுங்கள். எனக்கு வேறு ஒன்றும் வேண்டாம். நான் என் நாட்டில் பசியினால் வாடிக் கொண்டிருந்தேன். கடைசியில் சொந்த நாட்டை விட்டுவிட்டு வயிற்றுப் பாட்டுக்காக வெளியே வரவேண்டியதாகி விட்டது. நீங்கள் என்ன வேலை கொடுத்தாலும் நான் செய்யத் தயார். உணவைக் கண்டு எத்தனையோ நாட்கள் ஆகிவிட்டன" என்று கெஞ்சினான் அவன்.

அறிவு விழித்தது. "அப்பா! என் நிலையும் உன் நிலையைவிட மோசமாக இருக்கிறதே! நானும் பசியினால் வாடிக் கொண்டிருக்கிறேனே!" என்று பதில் அளித்தது அறிவுப் பசிகொண்ட அறிவு.

இதைக் கேட்டதும் அந்த அயலான் மிகவும் மனம் வருந்தினான். பிறகு அவன் அறிவைப் பார்த்து, "நான் உங்கள் துயரத்தைக் கேட்டு மிகவும் வருந்துகிறேன். உங்கள் நண்பனாகவே என்னையும் எண்ணுங்கள். துயரத்தில் ஆழ்ந்திருக்கும் நாம் இருவரும் ஒருவரை யொருவர் புரிந்து கொண்டு அநுதாபம் காட்டினால் அதுவே போதுமானது. பசியினால் வாடுவது சர்வ சகஜம்; மிகவும் சாதாரண விஷயமும் கூட. கடவுள் உங்களைக் காப்பாற்றுவாராக! எவ்விதத்திலாவது நான் உங்களுக்கு உதவி செய்ய முடியுமானால் சொல்லுங்கள். நான் சித்தமா யிருக்கிறேன்!" என்று கூறினான் அந்த அயலான்.

வயிறு நிரம்பி யிருக்கும் காலத்தில்தான் நம் நாட்டவன், பிற நாட்டவன் என்னும் பிரச்னைகள் எழுகின்றன என்பதை ஞானம் அறிவுக்கண் கொண்டு கண்டு கொண்டது. மற்ற எல்லாவற்றையும் விட நமக்குச் சத்துரு இந்தப் பசிப்பிணிதான். இந்தப் பசிப் பிணியைப் போக்கி வெற்றி கொள்ள முதலில் முயற்சிக்க வேண்டும். அதற்குப் பின் தான் மற்ற விஷயங்களைப் பற்றிச் சிந்திக்க வேண்டும் என்ற முடிவுக்கு வர ஞானத்துக்கு வெகு நேரம் பிடிக்கவில்லை.

ஆகவே அது பசியால் வாடுபவர்களனைவரையும் ஒன்று கூட்டி ஒரு பசிப்படையைத் திரட்ட முன் வந்தது. அது அப்படிப் பசிப் படை திரட்ட முன் வந்ததன் நோக்கம் என்னவென்றால், பணக்காரர்களிடம் இருக்கும் பணம் அனைத்தையும் பிடுங்கிச் சகலருக்கும் சமமாகப் பங்கிட்டுப் பசித்தவர்களுக்கு உணவு கிடைக்குமாறு செய்ய வேண்டும் என்பதே. ஆனால் பணக்காரர்கள் அறிவின் அந்தச் சூழ்ச்சியை அறிந்ததும் தம் ஆட்களை அனுப்பி அதைப் பிடித்து ஒரு மலைக் குகையில் அடைத்து விட்டனர். அங்கே அது தனிமையில் திண்டாடித் திக்குமுக்காடியது. ஒரு பிடி கடலையும் ஒரு குவளை நீரும்தான் அதற்கு ஆகாரம். அந்தகாரத்திலே அடைபட்டிருந்த அறிவுக்கு மூளையே குழம்பிற்று. வாழ்க்கையே சுமையாகத் தோன்றியது.

'நானோ பரமாத்மாவின் பிரதிநிதி. அறிவுக்கெல்லாம் மேலான அறிவு என்னும் பெயர் கொண்ட ஞானம். பரமாத்மாவின் பிரதிநிதியாகிய நானே உண்ண உணவின்றிப் பல நாட்கள் திண்டாடினால், சாதாரண மக்கள் என்ன செய்வார்கள்? இப்படிப்பட்ட வாழ்க்கை வாழ்ந்து என்ன பயன்? இதைக் காட்டிலும் தற்கொலை செய்து கொண்டு தன்னையே மாய்த்துக் கொள்ளுவது எவ்வளவோ மேலானதல்லவா?' என்று அதிதீவிரமாக யோசித்தது.



ஒரு நாள் அது குகைச் சிறையிலிருந்து பிறர் கண்களில் படாமல் கிளம்பிக் கோட்டையின் மதில் மீது ஏறி நின்று எட்டிப் பார்த்தது. கோட்டையைச் சுற்றிலும் இருந்த அகழியில் தண்ணீர் நிரம்பி இருந்தது. அதைக் கண்டதும் அதன் மூளையில் ஒரு யோசனை பளிச்சிட்டது.

"இதில் குதித்து நாம் நம் உயிரை மாய்த்துக் கொண்டு விட வேண்டும். பிறகு நேரே பரமாத்மாவிடம் சென்று, 'போதும், போதும்! இந்தப் பொறுப்பிலிருந்து என்னை விடுவித்து விடுங்கள். நான் உங்கள் பிரதிநிதியாக மண்ணுலகத்துக்குச் சென்றேனே, என்னை யாராவது அங்கே லட்சியம் செய்தார்களா? எனக்கு அங்கே இடமில்லை' என்று முறையிட்டுத் தன் பொறுப்பைக் கழித்துக் கொள்ள வேண்டும்" என்று முடிவுக்கு வந்தது.

அடுத்த கணம் அது தன் அசையாத கண்களினால் அகழியின் அசையாத நீரை உற்று நோக்கியது. அடுத்த நிமிஷம் அது அகழியில் குதிக்கவும் தயாராகி விட்டது. அப்பொழுது தற்செயலாக அதற்குத் தன் பிரதிபிம்பமே நீரில் தெரிந்தது. "நீ உன்னுடனேயே அல்லவா போர் புரிந்து கொண்டிருக்கிறாய்?" என்று கைதட்டிக் கேலி செய்வது போல அகழியின் நீர் காற்றில் சலசலத்தது.

அறிவு நாணிக் குறுகி நின்றது. பிறகு மெதுவாக மதிலிலிருந்து இறங்கிக் கோட்டைக்குள் சுற்ற ஆரம்பித்தது.

அப்படிச் சுற்றிக் கொண்டிருக்கும் பொழுது அதற்கு வாழ்க்கையின் ரகசியம் ஒன்று புலனாகியது.

தண்ணீர் மேலிருந்து கீழ் நோக்கிப் போவது போலத்தான் மனித வாழ்க்கையும். சுலபம்தான் அதன் குறிக்கோள். சுலபத்தை நாடிச் செல்லுவதனால் வாழ்க்கையிலே பல விதமான சிக்கல்களும் சிரமங்களும் ஏற்படுகின்றன. அதற்கு நாமும் விதிவிலக்கல்லவே!

அறிவு வளர வளர, வாழ்க்கை சுலபத்தை நாட நாட, சிக்கறுக்க முடியாத சிக்கல்களும் சிரமங்களும் அதிகரித்துக் கொண்டே போகின்றன. இது இயற்கையின் நியதி தானோ?

யோசனையில் மூழ்கியிருந்த ஞானம் "கடைசியில் நமக்கு நாமே சத்துருவாகி விடுவோமோ?" என்று சற்று உரக்கவே முணுமுணுத்துக் கொண்டது.

# வருவானா அவன்?

**தேனீ**

"அம்மா, நீ யாரை எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறாய்?"

"குழந்தாய் நான் வேறு யாரை எதிர்பார்த்துக்கொண்டிருப்பேன்? நீயே சொல்! கப்பல் இன்னும் வரவில்லையா?"

"இல்லை"

"கரையில் ஜனங்கள் காணப்படுகிறார்கள். என் மகன் கிருஷ்ணன் இன்று நிச்சயம் வந்துவிடுவான்."

"நீ எப்போதும் இப்படித்தான் சொல்லிக் கொண்டிருக்கிறாய்."

"நேற்று இரவு அப்படிச் சொப்பனம் கண்டேன். அம்மா!— பக்கத்து வீட்டுக்காரர் பம்பாய்க்குப் போய்விட்டு வந்தார் அல்லவா?— அவர் என்ன சொன்னார் தெரியுமா? – கிருஷ்ணனை அவர் பம்பாயில் பார்த்தாராம்."

"அம்மா, நீ இதிலெல்லாம் நம்பிக்கை வைக்காதே. அவர் கிருஷ்ணனைப் போல வேறு யாரையாவது பார்த்திருக்கலாம்"

"மகனே, இந்த மனம் படும் வேதனை உனக்கு என்ன தெரியும்? கடந்த மூன்று மாதமாக நான் எவ்வளவு கஷ்டத்தைச் சகித்துக் கொண்டிருக்கிறேன் என்பது அதோ அந்த பகவானுக்குத்தான் தெரியும்."

"கடிதம் வராததற்காக நீ இவ்வளவு கவலைப் படக்கூடாது. கப்பல் வேலை பார்! இன்று ஓரிடம் இருப்பார்கள், நாளை வேறோரிடம் இருப்பார்கள். கடிதம் குறிப்பிட்ட காலத்தில் வந்து சேருவது அசாத்தியம்."

"அவனுக்காக நான் எவ்வளவு துக்கப்படுகிறேன் என்பது உனக்குத் தெரியாது. அவனைக் காப்பாற்றுவது எனக்குக் கஷ்டமாகிவிட்டது. இதனால் வெறுப்படைந்து என்னைத் தனியே விட்டுவிட்டுப் போய் விட்டான்."

"அவன் செய்ததில் தப்பு என்ன இருக்கிறது? அவன் இங்கே இருந்திருந்தால் மற்றவர்களோடு சேர்ந்து கெட்டுப் போயிருப்பான்"

"இருந்தாலும், சொந்த ஊரையும் தேசத்தையும் விட்டுவிட்டு அவன் போய் விட்டானே!— அதுவும் எங்கே? சமுத்திரத்துக்கு!— இரவும் பகலும் சமுத்திரத்திலேயே வாசம்!"

"அவன் பயந்தாங்கொள்ளி அல்ல. யுத்தம் ஆரம்பமானவுடனேயே அவன் கப்பல் வேலைக்குப் போய்விட்டான். இது பாராட்டத்தக்க விஷயம் அல்லவா?"

"இருந்தாலும் அவன் என்னையும் கொஞ்சம் நினைத்திருக்க வேண்டும்"

"உன்னை ஒரு நாள் கூட அவன் மறக்க மாட்டான்."

"அப்படிப் பார்க்கப்போனால் அவன் என்னை மறக்கவில்லை என்றுதான் சொல்ல வேண்டும். சென்ற மூன்று வருஷ காலமாக வாரம் ஒரு கடிதம் போட அவன் தவறியதே இல்லை. பணமும் தவறாமல் அனுப்பிவந்தான். ஆனால், இதனாலெல்லாம் எனக்கு நிம்மதி உண்டாகி விடுமா? நீயே சொல்லு!"

"இப்போது அவன் வந்துவிடுவான் அல்லவா?"

"அவன் வந்துவிடுவான் என்ற நம்பிக்கையால்தான் சென்ற மூன்று வருஷகாலமாக நான் உயிரை வைத்துக் கொண்டிருக்கிறேன்—மூன்று வாரமாக அவனிடமிருந்து கடிதமே வரவில்லை. என் மனம் 'திக்' 'திக்' கென்று அடித்துக் கொள்ளுகிறது."

"அவன் நிச்சயம் வந்துவிடுவான்; இதில் சந்தேகமே இல்லை. கப்பல் வேலைக்குப் போனவர்களில் எத்தனையோ பேர் பணக்காரர்களாகத் திரும்பவில்லையா? அப்படியே அவனும் வருவான்."

"அவன் வராமல் இருக்கமாட்டான். அவன்மேல் எனக்கு எவ்வளவு அன்பு இருக்கிறது என்பது அவனுக்குத் தெரியும்.—நேற்றிரவு கனவில் அவனைப் பார்த்தேன். இன்று அவனுக்காகப் பக்குவான்னம் கூடச் செய்து வைத்திருக்கிறேன்."

"அம்மா, கப்பல் வேலையிலிருந்த திலீப் நேற்றுத்தான் வந்தானாம். அவனிடம் கேட்டால் கிருஷ்ணனைப் பற்றி ஏதாவது தகவல் தெரியும்."

"அப்படியா?—நிஜமாகவா? இப்போதே போய் நான் கேட்கிறேன்"

"ஆனால், இந்தக் கப்பலில் கிருஷ்ணன் வந்துவிடுவான் என்று நீ சொல்லிக் கொண்டிருந்தாயே?"

"ஆம், இந்தக் கப்பலில் அவன் வராவிட்டால் திலீப்பிடம் சென்று கேட்கிறேன்"

"அம்மா, தம்பி வந்த பிறகுகூட நீ என் வீட்டில்தான் இருக்க வேண்டும்?"

"ஆ! அது எப்படி முடியும்? அவனுக்குக் கல்யாணம்—கல்யாணம் பண்ணி வைக்க வேண்டாமா?"

"அவன் தானாகக் கல்யாணம் பண்ணிக் கொண்டு மனைவியுடன் வாழ்வான்.



அம்மா! — நீ அவனுடன் இருக்க வேண்டிய அவசியம் இல்லை."

"என் கை அன்னம் உண்டு என் மடியிலே படுத்துறங்கிய என் கண்மணி, ஐந்து வருஷத்துக்குப் பிறகு இங்கே வந்து எப்படித் தனியாக இருப்பான்? என் கரஸ்பரிசத்துக்காக அவன் ஏங்கிக்கொண்டு இருப்பானே! என் வாயிலிருந்து வரக் கூடிய அன்பு மொழியைக் கேட்பதற்காக அவன் எவ்வளவு தவித்துக்கொண்டிருப்பான்!........."

"அம்மா, ஏன் அழுகிறாய்?"

"இது ஆனந்தக் கண்ணீரடி, மகளே! என் கண்மணி வரப்போகிறான் என்பதை அறிந்து என் இருதயம் ஆனந்தத்தால் விம்முகிறது"

"அம்மா, கப்பல் வந்துவிட்டது. ஜனங்களும் இறங்கி விட்டார்கள். ஆனால் கிருஷ்ணனைக் காணுமே!"

"ஏன் வரவில்லை? — பகவானே, அவனைக் காப்பாற்று!"

* * *

"திலீப், நீ ஏன் கவலையில் மூழ்கியிருக்கிறாய்? உண்மையை ஒளிக்காமல் சொல் என் மகன் எப்படியிருக்கிறான். நீ அவனைப் பார்த்தாயா?"

"கிருஷ்ணன் சௌக்கியமாக இருக்கிறான், அம்மா!"

"பகவானே, உன்னுடைய கருணை அபரிமிதமானது!"

"கிருஷ்ணனும் நானும் ஒன்றரை வருஷம் வரை ஒரே கப்பலில்தான் இருந்தோம்."

"அப்புறம்? — சீக்கிரமாகச் சொல்!"

"நாங்கள் சில சமயம் நாள் கணக்காகச் சமுத்திரத்திலேயே இருக்க வேண்டியதாக நேரும். சில சமயம் புயல் அடிக்கும் போது, கப்பலே மூழ்கிவிடும் போல இருக்கும்."

"ஹா, கடவுளே!"

"சில சமயம் எதிரிக் கப்பல்கள் எங்களைப் பின் தொடர்ந்து வந்து சுடும்."

"இத்தனை கஷ்டங்களுக்கும் அபாயங்களுக்கும் மத்தியிலா என் மகன் காலங் கழித்தான்? — சரி!"

"ஒரு முறை ஒரு குண்டு என் அருகே விழுந்தது —."

"கடவுளே!"

"மூன்று சிப்பந்திகள் செத்துப் போனார்கள் —"

"கிருஷ்ணனுக்கு அபாயம் ஒன்றும் நேரவில்லையே? — உண்மையைச் சொல்."

"அவனுக்கு இலேசாக ஒரு காயம் மாத்திரம் ஏற்பட்டது."

"பாவம், அவன் எவ்வளவு கஷ்டப்பட்டிருக்கிறான்!"

"ஒன்றரை மாதம் அவன் படுக்கையிலேயே படுத்திருந்தான். நான் அவன் பக்கத்திலேயே இருந்தேன்."

"அப்புறம் அவன் குணமாகிவிட்டான் அல்லவா?"

"ஆம், கடைசியில் அவன் குணமாகிவிட்டான்......"

"ஏன் நிறுத்திவிட்டாய்? சொல்லு!"

"நான் வேறொரு கப்பலுக்குப் போய் விட்டேன்."

"கிருஷ்ணன்?"

"அதே கப்பலிலேயே இருந்தான்."

"இப்போது?"

"இப்போது யுத்தம் முடிந்து விட்டது. எப்போதாவது அவன் வந்துவிடுவான்."

"கடவுள் கருணாநிதி அல்லவா? நான் போய் வருகிறேன்."

* * *

திலீப் ஒரு நீண்ட பெருமூச்சு விட்டான். துப்பாக்கிக் குண்டு பட்டு இறந்து போன கிருஷ்ணனின் நினைவு வந்ததும் அவன் இதயத்தில் வேதனை குடி கொண்டது.

*(ஸர்தேசாய் எழுதிய மராட்டிக் கதையைத் தழுவியது.)*

# கலைகளுக்கு எல்லை கிடையாது

ரஜனி

கொழும்பு, டிஸம்பர் 7.

ரேடியோ ஸிலோன் தமிழ் நிகழ்ச்சிப் பகுதி அதிபர் செல்வி டி. எம். எலியாஸின் நியமனத்தைப் பற்றி இவ்வாரம் பார்லிமெண்டில் காரசாரமான விவாதம் நடைபெற்றது. விவாதத்தைக் கவனிக்க ஏராளமான பெண்களும் காலரிகளை அலங்கரித்துக் கொண்டிருந்தார்கள். தமிழ் நிகழ்ச்சிப் பகுதி அதிபர் பதவிக்கு ஒரு இலங்கையர் தேவையென்று விளம்பரம் செய்துவிட்டு இலங்கையரல்லாத ஒருவரை நியமித்தது தவறு என்று ஸ்ரீ வி. சுந்தரலிங்கம் ஒரு நிர்மாணத்தை பிரேரேபித்து, இந்த நியமனத்தில் அரசியல் ஆதிக்கம் பிரயோகிக்கப்பட்டிருப்பதாக ஸ்ரீ கே. கனகரத்தினத்தின் மீது மறைமுகமாகக் குற்றஞ் சாட்டினார். இதற்கு ஸ்ரீ கனகரத்தினமும் ரேடியோ மந்திரி ஸ்ரீ வி. சிற்றம்பலமும் அளித்த பதில்கள் இலங்கை இந்திய எதிர்கால கலாசார உறவுக்கு மிக முக்கியமானவை.

செல்வி எலியாஸ், ஒரு மலையாளப் பெண்மணிதான் என்றாலும் பிறந்த முப்பது நாட்களுக்குள் இலங்கைக்கு வந்து இந்நாட்டிலேயே முழுக்க வளர்ந்திருக்கிறார். ஆகையால் சகல விதங்களிலும் அவர் இலங்கையராகத் தகுதியுடையவர். இப்பொழுது இலங்கையராகியும் விட்டார். ஆங்கிலம், தமிழ், சங்கீதம் ஆகிய மூன்று பாடங்களிலும் பி. ஏ. பட்டம் பெற்றவர். இவ்வித யோக்கியதாம்சமுடைய மனுதார் வேறு யாரும் இல்லாதபடியினால் அவர் நியமிக்கப்பட்டார். "இதில் அரசியல் ஆதிக்கம் என்ன இருக்கிறது?" என்று கேட்டார் ஸ்ரீ கனகரத்தினம். மந்திரி சபைக்குப் பெரும் தூண் போலிருந்து, இந்தியருக்கு நியாயம் வழங்கவில்லையென்று தம் மந்திரி பதவியையே ராஜிநாமாச் செய்த ஸ்ரீ சுந்தரலிங்கம் இப்பொழுது இலங்கைப் பிரஜையாகிய ஒரு இந்தியரின் நியமனத்தை ஆட்சேபிப்பது விசித்திரமாயிருக்கிறதென்றார் ரேடியோ மந்திரி ஸ்ரீ சிற்றம்பலம். செல்வி எலியாஸ் நியமிக்கப்பட்ட பொழுது இந்தியராயிருந்தாலும் இலங்கையராகும் யோக்கியதாம்சங்கள் இருந்தமையினால் அவரை நியமித்தது சட்ட சம்மதமானதுதான். முக்கியமாக தமிழ் சங்கீதத் துறையில் இம்மாதிரிப் பதவிகளுக்கு இலங்கையர்களை நியமிக்கக்கூடிய நிலைமைக்கு நாம் இன்னும் வரவில்லை. ஆகையால் தென் இந்தியாவையே நாம் எதிர்பார்க்க வேண்டியிருக்கும். கலைக்கும் சங்கீதத்துக்கும் எல்லை வரம்பு கிடையாது. வகுப்பு வேற்றுமைகளுமில்லை. இதுமாதிரி குறுகிய மனோபாவங்களினால் அரும் கலைகளைக் கட்டுப்படுத்த முடியாது. இவ்வாறு மந்திரி சிற்றம்பலம் அழுத்தம் திருத்தமாகச் சொன்னார்.

முடிவில் ஸ்ரீ சுந்தரலிங்கத்தின் நிர்மாணம் ஓட்டுக்கு விட்டபொழுது அதை ஆதரித்து மூன்று பேர்கள் மட்டுமே ஓட்டுக் கொடுத்தார்கள். நிர்மாணம் தோல்வியடைந்தது.

## நெருப்புடன் விளையாடாதீர்

நேற்று செனட் சபையில் இந்தியர் பாகிஸ்தானியர் பிரஜாவுரிமைச் சட்டத் திருத்தம் இரண்டாவது மூன்றாவது முறைகளாக ஒரே நாளில் நிறைவேற்றப்பட்டது. அதன்மீது செனட்டர் நடேசன் பேசுகையில் இலங்கையில் பிறந்த இந்தியர்கள் பிரஜைகளாவதை மசோதா சுலபமாக்கிய பொழுதிலும் இந்தியத் தொழிலாளர்களுக்கு மசோதா போதிய அளவு நியாயம் செய்யவில்லையென்றும் தொழிலாளர்களின் உரிமைகளை மறுப்பது நெருப்புடன் விளையாடுவதைப் போன்றதென்றும் ஒரு கடுமையான எச்சரிக்கையை விடுத்தார்.

## சுத்தானந்தர் விஜயம்

ஸ்வாமி சுத்தானந்த பாரதியார் அவர்கள் நாளது டிஸம்பர் 27-ம் தேதி யாழ்ப்பாணத்துக்கு விஜயம் செய்கிறார். சென்ற ஞாயிற்றுக் கிழமை வைதீஸ்வர வித்யாலயத்தில் நடைபெற்ற ஒரு பொதுக் கூட்டத்தில் சுத்தானந்தரை வரவேற்கவும் தேவையான இதர ஏற்பாடுகளைச் செய்யவும் டாக்டர் வி. குருஸ்வாமியைத் தலைவராகவும் ஸ்ரீ க. இராமச்சந்திரனைக் காரியதரிசியாகவும் கொண்ட ஒரு கமிட்டி நியமிக்கப்பட்டது. ஸ்வாமிஜீ நான்கு தினங்கள் வரை யாழ்ப்பாணத்தின் பல பாகங்களிலும் சுற்றுப் பிரயாணம் செய்வார். பிறகு அநுராதபுரம் மார்க்கமாகத் திருகோணமலைக்கு அவர் விஜயம் செய்வார். சிறக, இவ்வாரம் மட்டக்களப்பில் ஸ்ரீ க. ஷண்முக ராஜா தலைமையில் நடைபெற்ற ஒரு பொதுக் கூட்டத்தில் சுத்தானந்த நிலையம் என்று ஒரு ஸ்தாபனம் ஆரம்பித்து வைக்கப்பட்டிருக்கிறது.



தில் ஒரு வெளிச்சம் தெரிந்தது. வரவர அது நெருங்க ஆரம்பித்தது. சுந்தரி மிகவும் கவனத்துடன் அந்த வெளிச்சத்தையே உற்றுப் பார்த்தாள்.

முதலில் ஒரு புள்ளி வடிவமாய்த் தோன்றிய அந்த வெளிச்சம் வர வர ஒளிமயமான ஒரு நட்சத்திரத்தைப் போல் தெரிய ஆரம்பித்தது. இன்னும் சில நிமிஷங்களுக் கெல்லாம் அந்த வெளிச்சம் இன்னும் பெரிதாய்த் தெரிந்தது. சுந்தரி இன்னும் ஆவலோடு கூர்மையாய்க் கவனித்தாள்.

ஒரு பெரிய மாளிகை, அற்புதமான மாளிகை, கடல் ஜலத்தில் மிதந்து வருவது நன்றாய்த் தெரிந்தது! சுந்தரிக்கு ஒரு புறம் ஆச்சரியமாகவும் இன்னொருபுறம் பயமாகவும் இருந்தது. இதுவரையில் அவள் எப்போதுமே பார்த்திராத காட்சியைப் பார்த்தால் அவளுக்குப் பயமாயிருக்காதா?

கடலில் மிதந்து வந்த அந்த மாளிகையில் குபு குபு என்று புகை வந்து கொண்டிருந்தது. மாளிகை ஜன்னல்களின் வழியாக விளக்கு வெளிச்சம் தெரிந்தது. சுந்தரி நீந்திக் கொண்டே போய் அந்த விநோத மாளிகையை நெருங்கினாள்.

ஆமாம். அது ஒரு கப்பல்! அவளுடைய தாயாரும் சகோதரிகளும் கப்பலைப் பற்றி நிறையச் சொல்லி யிருக்கிறார்கள். கப்பல் அவர்கள் சொன்ன மாதிரிதான் இருந்தது. அம்மாடியோ! எவ்வளவு பெரிதாயிருக்கிறது, கப்பல்!

ஜலத்தில் கப்பலுக்குச் சரியாக நீந்திக் கொண்டே போன சுந்தரி, மேலே பார்த்தாள். கப்பலில் கைப்பிடிப் பலகையில் சாய்ந்த வண்ணம் பல பேர் நிற்பது, சுந்தரிக்கு நன்றாய்த் தெரிந்தது. விளக்குகள்தான் வரிசை வரிசையாகக் கப்பலின் மேல்தளத்தில் பிரகாசிக்கின்றனவே!

சுந்தரிக்கு ஏற்பட்ட சந்தோஷத்துக்கு எல்லையே இல்லை. 'முதல் முதலில் நாம் சமுத்திர ஜலத்துக்கு மேலே போய் நீந்திப் பொழுது போக்க வந்த சமயத்தில் இந்த மாதிரிப் பெரிய கப்பலைப் பார்க்கும்படியான பாக்கியம் இருந்ததே!' என்று நினைத்து அவள் குதூகலம் அடைந்தாள்.

அது ஒரு மகாராஜாவின் கப்பலாயிருக்க வேண்டும். ஏனென்றால் ஆடை ஆபரண அலங்காரங்களுடன் அழகிய பெண்மணிகளும், வாளும் வேலும் ஏந்திய வீரர்களும் இருந்தனர்.

அந்தக் கப்பலுக்குச் செய்திருந்த அலங்காரமே பிரமாதமாக இருந்தது. தங்கத்தினால் செய்யப்பட்ட மாவிலைத் தோரணங்கள் பள பள வென்று கண்ணைப் பறித்தன. வில்லும் அம்பும் அடையாளமிட்ட பெரிய கொடி கப்பலுக்கு முன்னால் காற்றில் அசைந்து ஆடியது.

அந்த வீரர்களுக்கு மத்தியில் ஓர் அழகிய ராஜகுமாரனும் இருந்தான். அவன் தலையில் இருந்த கிரீடம் விளக்கு வெளிச்சத்தில் பளீர் பளீர் என்று ஒளி வீசியது. அவன் முகத்தில்தான் என்ன களை!

சுந்தரிக்குக் கப்பலின் மேல் நின்று கொண்டிருந்த எவர்மீதும் பார்வை செல்லவில்லை. அந்த அழகிய ராஜகுமாரன் மீதுதான் சென்றது. தான் ஜலமட்டத்துக்கு மேலே வந்து வெகு நேரம் ஆகி விட்டது என்பதையும் மறந்து, தன் சகோதரிகளையும் மறந்து, தாயாரையும் மறந்து சுந்தரி ராஜகுமாரனையே பார்த்துக் கொண்டிருந்தாள். அவனது அழகு தவழும் முகம் சமுத்திர சுந்தரியின் கண்ணையும் கருத்தையும் கவர்ந்தது. அவள் தன்னையே மறந்தாள். (தொடரும்)

# நடுக் கடலிலே!

ப. ராதாகிருஷ்ணன்

நள்ளிரவு. காங்கேயன் துறைப் பகுதியில் நிசப்தம் குடிகொண்டிருந்தது. சிங்களத்தீவின் கடற்கரை காண்போர் கண்ணையும் மனத்தையும் ஒருங்கே கவரும் இயற்கை வனப்புடன் தோன்றியது. நிர்மலமான நீலவானில் பவனி வரும் வெண்மதியின் தண்ணொளியும், மெல்லென வீசி, மேனியை வருடி, இன்ப ஸ்பரிசம் விளைக்கும் இளந்தென்றலும், எவ்வளவு சோர்ந்த உள்ளத்திற்கும் ஒரு புத்துணர்ச்சி யளிக்கக் கூடியனவா யிருந்தன.

எழிலும் இன்பமும் மலிந்த இச் சூழ்நிலையிலும் துன்பம் நிழலடிக்காமற் போகவில்லை. இதே கடற்கரையின் மணலில், ஒரு இளம் பெண் கண்ணீர் சிந்திக் கொண் டிருந்தாள்., செய்வது என்னவென்று அறியாதவனாக அவளருகே நின்றான் ஒரு வாலிபன். அவ்விரு இளம் இதயங்களையும் பிணைத்த அன்புக்கொடி பிரிவுத் துயரமென்னும் பளுவைத் தாங்கும் சக்தியின்றித் தத்தளித்தது.

"சௌந்திரம்! என் கண்ணல்லவா? சும்மா அழுது என்ன பிரயோஜனம்? சொல்லுவதைக் கேள். நீ வீட்டுக்குப் போ, தங்கம்" என்று கொஞ்சுதலாக வற்புறுத்தினான் ராஜநாயகம்.

அவள் நகரவில்லை. "மாட்டேன். நீங்கள் போன பிறகு எனக்கு மட்டும் இங்கே என்ன வாழ்வு வேண்டியிருக்கிறது? என்னையும் உங்களுடனேயே அழைத்துப் போவதானால் சரி. இல்லாவிட்டால் இப்படியே கடலில் குதித்துப் பிராணனை விட்டு விடுவேன். இது சத்தியம்" என்றாள். அவள் பேச்சில் தொனித்த உறுதியும் ஆவேசமும் ராஜநாயகத்துக்குச் சிறிது அச்சம் ஏற்படுத்தின. அது வீண் மிரட்டல் அல்லவென்று அவன் கண்டு கொண்டான்.

"நன்றாக யோசனை செய்து பார். கலியாணமாகாமல் நாமிருவரும் அப்படிச் சேர்ந்து கிளம்பிவிட்டால் உலகம் என்ன சொல்லும்?" என்றான் அவன்.

"உலகத்தைப் பற்றி எனக்குக் கவலையில்லை. பெண் ஜன்மமாகிய நானே அதைப் பொருட் படுத்தாதபோது உங்களுக்கென்ன வந்தது?" என்றாள்.

'இவளோடு வாதாடிப் பயனில்லை. எதற்கும் இன்னுமொரு கேள்வியையும் கேட்டுப் பார்க்கலாம்' என்ற எண்ணத்துடன், "இதோ பார்! உன்னை வீட்டில் காணாமல் உன் அப்பா தேடிக்கொண்டு புறப்பட்டு இங்கே வந்து விட்டால்...?" என்றான் ராஜநாயகம்.

ஆம். அவளுடைய தந்தையான மருதமுத்துவின் மூர்க்கத்தனம் வெகு பிரசித்தமானது. மிகுந்த தைரியசாலியான இந்த இளைஞனுக்கே அவன் நினைவு சற்றுத் தயக்கம் தந்தது. தன் மகளுடன் இந்தியாவுக்கு ஓடிப் போக முயலும் ராஜநாயகத்தை மருதமுத்து கையுங் களவுமாய்ப் பிடித்து விட்டானானால் அப்புறம் அவன் தப்ப முடியாது.

தகப்பன் பேச்சை யெடுத்ததும் மகளும் மென்று விழுங்கினாள். ஆனால் அவளது உறுதி குன்றி விடவில்லை. "அப்பாதான் ஊரில் இல்லையே. 'நாளைக்குத்தான் திரும்புவேன்' என்று சொல்லிப் போனார். அவர் வருமுன் நாம் இந்தியா போய்ச் சேர்ந்து விட முடியாதா?" என்று சொல்லிவிட்டு ஒரு நிமிஷம் ஏதோ யோசனை செய்தாள் சௌந்திரம்.

பின் திடீரென்று மறுபடி பேசத் தொடங்கினாள்: "அப்படியே நாம் எதிர்பாராதபடி அவர் வந்து பிடித்துக் கொண்டால்தான் என்ன? தாராளமாய் என் மென்னியைத் திருகிக் கொன்றுவிட்டுப் போகட்டும். எனக்கு இஷ்டமில்லாத புருஷனுக்குக் கட்டிக் கொடுப்பதை விட அவர் கையாலேயே கொன்று விடுவது மேல்."

"நீ அவருக்கு ஒரே மகள். உன்னை அவர் என்ன வேண்டுமானாலும் செய்வார். கொன்றாலும் கொல்லுவார், அல்லது உனக்குக் கோவில் கட்டினாலும் கட்டுவார். நடுவில் என் கதி என்ன ஆவது?"

"நீங்களா?......தைரியமிருந்தால் ஆண் பிள்ளையைப் போல் நின்று அவரோடு சண்டை போடுங்கள்; இல்லாவிட்டால் ஓட்டம் பிடியுங்கள். என்ன நேருவதானாலும் நான் உங்களோடு வரத்தான் போகிறேன்" என்று கூறிவிட்டுக் கரையோரமாக நின்ற படகிலேறி உட்கார்ந்து விட்டாள் சௌந்திரம். 'போக்கிரிப் பெண்! நம்மையே மடக்குகிறாளே' என்று நினைத்துக் கொண்டான். கூடவே 'கடைசியில் அவள் யார்? இனி நம்முடைய சௌந்திரம் தானே?' என்ற பெருமிதமும் அவனுக்கு ஏற்பட்டது.

துடுப்பைக் கையிலெடுத்தான். அவனுக்கு ரோஷம் பிறந்து விட்டதற்கடையாளமாகப் படகு, நீரைக் கிழித்துக்

கொண்டு பாய்ந்து சென்றது. கரையில் வளர்ந்திருந்த தென்னை மரங்களது நிழலின் கருமையினின்று விடுபட்டு, நிலா வொளி சூழ்ந்த கடலின் எல்லையில் பிரவேசித்ததும் ராஜநாயகம் எதிர்க்கோடியில் அமர்ந்திருந்த சௌந்திரத்தை ஒரு முறை கூர்ந்து நோக்கினான்.

சற்று முன் கண்ணீர் வடித்த கண்களில் இப்போது குறும்பு துள்ளி விளையாடிற்று. படபடவென்று வார்த்தைகளைக் கொட்டிய உதடுகளில் குறுநகை தவழ்ந்தது. எண்ணிய காரியத்தைச் சாதித்துக் கொண்டபின் அவள் கண்களில் பெருகிய கண்ணீரும் ஆவேசமும் வந்த சுவடு தெரியாமல் மறைந்து விட்டன.

சௌந்திரம் அவ்வளவு பிடிவாதம் செய்து கிளம்பியிராவிட்டால், இதே படகில், இதே கடல்மீது, தன்னந் தனியனாய், சோகம் நிறைந்த உள்ளத்தோடு தாய் நாடு சென்று கொண்டிருப்பான் ராஜநாயகம். மறுபக்கம் அவள் காதலனைப் பிரிந்த துயரில் மூழ்கி யிருப்பாள்.

இப்போதும் என்ன, பெற்று வளர்த்தவனிடமிருந்து மகளை அபகரித்துச் செல்கிறோமே என்ற வருத்தம் ராஜநாயகத்துக்கு இல்லாமற் போய்விடவில்லை. மருதமுத்துவுக்கு மட்டும் அத்தனை பணத்தாசையும் மூர்க்க குணமும் இல்லாதிருந்தால்......

அவ்விளைஞனின் உள்ளத்தில் பழைய நினைவுகள் மீண்டும் எழுந்தன, புகைப் படக் காட்சிபோல் கோவையாக.

* * *

இரண்டு வருஷங்களுக்கு முன் பிழைப்பைத் தேடி இலங்கைத் தீவுக்கு வந்தான் ராஜநாயகம். அவனைப் போலவே இன்னும் எத்தனையோ பேர், இலங்கை இந்தியரின் உண்மை நிலையறியாமல் வந்து சேர்ந்து கொண்டிருந்தனர்.

ராஜநாயகம் அநாதை. எப்படியோ இலங்கை வந்து சேர்ந்துவிட்டான். ஆனால் வேலை கிடைப்பது குதிரைக் கொம்பாயிருந்தது. மரியாதையாய்த் தாய்நாடு திரும்பி விடுவோமென்றால் அதற்கும் பணமில்லை.

கடலில் வலைவீசி மீன் பிடிக்கும் தொழிலில் ராஜநாயகத்திற்குச் சபலம் தட்டியது. சில நாட்களாகக் கூலிவேலை செய்து அதில் கிடைத்ததில் கொஞ்சம் சேமித்து வைத்திருந்தான். அதைக் கொண்டு ஒரு படகும் வலையும் வாங்கினான். காங்கேயன் துறையை அடுத்திருந்த ஒரு செம்படவனின் குடிசையை வாடகைக்குப் பிடித்துக் கொண்டு தொழிலைத் தொடங்கினான். சீக்கிரத்திலேயே அதில் அவனுக்குப் பயிற்சியும் உற்சாகமும் ஏற்பட்டன. அதற்கேற்பச் சுமாரான வரும்படியும் வந்தது. நாள் முழுவதும் பேரம் பண்ணிக்கொண்டும் சில்லறைக் காசைக் குலுக்கிக் கொண்டும் ஒரு சிறு கடைக்குள் அடைபட்டுக் கிடப்பதைவிட, இப்படிச் சுதந்திரமாக இயற்கை எழிலைப் பருகிக் கொண்டு மோனக் கடல்மீது பவனி வருவது எவ்வளவோ மேல் என்று எண்ணினான் ராஜநாயகம்.

இங்கும் தொல்லைகள் இருக்கத்தான் செய்தன. சில சிங்களச் செம்படவர்கள் வேண்டுமென்றே அவனது வலையைத் திருடி அறுத்தெறிந்து விட்டனர். இன்னொருவன் ராஜநாயகத்தின் படகில் ஓட்டை செய்ய முயன்று கொண்டிருந்த போது அவன் எதிர்பாராத விதமாய் வந்து விடவே, செம்மையாய் உதை வாங்கிக்கொண்டு ஓடவேண்டியதாயிற்று. இந்தச் சில்லறை விஷமங்களில் எல்லாம் ஈடுபட்டார்களே தவிர ராஜநாயகத்தை நேரில் கண்டால் அந்தச் செம்படவர்கள் எல்லோருக்கும் நடுக்கந்தான்.

மருதமுத்து பல வருஷங்களாக இலங்கையிலேயே நிலைத்திருப்பவன். ஐம்பது அறுபது குடிசைகளுக்கு நடுவே கம்பீரமாய் நின்ற காரை வீடு அவனுடையது. தாயற்ற தன் ஒரே மகளுடன் அதில் வசித்து வந்தான். வாழ்க்கையில் அவனுக்கு ஒன்றுதான் குறிக்கோள்—கொள்ளைப் பணம் சம்பாதித்துக் குபேரனைப் போல் வாழவேண்டும். ஆசை யிருந்தால் போதுமா? அதிர்ஷ்டம் வேண்டாமா? மருதமுத்துவுக்கு அந்த அம்சம் மட்டும் பூஜ்யம். அவன் கை வைத்த காரியம் எதுவும் உருப்படவில்லை. எப்பொழுதும் ஆயிரக்கணக்கில் வரப்போகும் பணத்தை யெண்ணி ஆகாயக் கோட்டை கட்டும் இந்தச் சோம்பேறிக்கு, சொற்ப வருமானத்திற்காக மெய் வருந்தி உழைக்கும் இளைஞன் ராஜநாயகத்தைக் கண்டு சிரிப்பு வந்தது. 'என்ன தம்பி! போயும் போயும் வலை வீசி மீன் பிடிக்கும் தொழிலில் போயிற்றே உன் புத்தி! இதில் என்ன சம்பாதித்துப் புரட்டிவிடப் போகிறாய்?' என்று கேலி செய்வான்.

தன் மகளும் ராஜநாயகமும் அன்பு வெள்ளத்தில் மிதக்கிறார்கள் என்ற உண்மை மருதமுத்துவுக்கு வெகு நாட்களாய்த் தெரியாமலேயிருந்தது. 'சௌந்திரத்தை எனக்குக் கட்டிக் கொடுக்கிறீர்களா?' என்று கேட்டுவிட இவ்விளைஞன் துடித்துக் கொண்டிருந்தான். ஆனால் அதற்குக் கடைசிவரை துணிச்சல் வரவில்லை. 'என் மகளை ஒரு பெரிய லக்ஷாதிபதிக்குத்தான் கொடுக்கப் போகிறேன்' என்று மருதமுத்து ஊரில் தம்பட்டம்

போடுவது ராஜநாயகத்துக்கு நன்றாய்த் தெரியும்.

இந்தக் களவொழுக்கத்தில் எத்தனை நாள் காலத்தைத் தள்ளுவது? எப்படியோ தைரியத்தை வரவழைத்துக் கொண்டு, இரண்டு தினங்களுக்கு முன் ராஜநாயகம் அவனைக் கேட்டே விட்டான்.

பார்க்க வேண்டுமே மருதமுத்து ஆடிய ஆட்டத்தை! அடித்தான், தள்ளினான்; கொதித்தான், குமுறினான்; பொங்கிப் பொருமினான் — இப்படியே எவ்வளவு வேண்டுமானாலும் அடுக்கிக் கொண்டு போகலாம். ஏமாற்றத்தாலும் அவமானத்தாலும் உள்ளமும் உடலும் ஒருங்கே குன்றிப்போன ராஜநாயகத்துக்கு மருதமுத்துவினுடைய வார்த்தைகள் மட்டும் மண்டையில் ஆணியறைந்தது போல் பதிந்து விட்டன.

"பிச்சைக்கார நாய்! என் காலைப் பிடிக்கக்கூட யோக்யதையில்லாத நீயா......"

என்ன கோர மொழிகள்! சாகும் வரை அவற்றை மறக்க முடியுமா? நாவினாற் சுட்ட வடுக்கள் அத்தனை லகுவில் ஆறுமே!

குழம்பிய உள்ளம் தெளிவடைந்ததும் ராஜநாயகம் ஒரு பிரதிக்ஞை செய்து கொண்டான், எக்காரணத்தைக் கொண்டும் இனி இலங்கையில் தாமதிப்பதில்லையென்று. தாய்நாடு போய்ச் சேர்ந்தாலே போதும். காதல் கை கூடாதென்று அறிந்த பின் இங்கு நிற்பதில் அர்த்தமென்ன? படகு இருக்கிறது. துடுப்பைத் தள்ளக் கையில் உரமிருக்கிறது. கடற் பிரயாணத்தில் ஆபத்துக்கள் இருக்கலாம். அவற்றைச் சமாளிக்க நெஞ்சிலும் உறுதியிருந்தது. மிஞ்சி மூழ்க நேர்ந்தாலும் அவனுக்கென்று ஒரு துளிக் கண்ணீர்சிந்துவார் யாருமில்லை. எனவே, 'போகிறேன்' என்று கூட ஒரு வார்த்தை சௌந்திரத்திடம் சொல்லிக் கொள்ளாமல் கிளம்ப முயன்றான் ராஜநாயகம்.

ஆனால் அவளா ஏமாறுவாள்? ராஜநாயகம் படகிற்குள் காலையெடுத்து வைக்கும் தருணம் பின்னாலிருந்து விம்மலின் ஓசை கேட்டது. அருவிபோல் வழியும் கண்ணீருடன் சௌந்திரம் நின்றாள். அவனைச் சமாதானம் செய்து வீட்டுக்குத் திருப்பியனுப்ப அவன் செய்த முயற்சிகள் வீணாயின. தன் பிடிவாதத்தில் சௌந்திரம் வெற்றி கண்டு விட்டாள். இதோ அவனுக்கு எதிரே கம்பீரமாக வீற்றிருக்கிறாள்.

இப்பொழுது அழுவதா, சிரிப்பதா? ராஜநாயகத்துக்கு அதுதான் விளங்கவில்லை.

* * *

"என்ன தூங்குகிறீர்கள்? கொஞ்சம் கண்ணைத் திறந்து பாருங்கள்" என்றாள் அவள் பரபரப்புடன்.

அவன் சிந்தனை கலைந்தது. "ஏன்? என்ன?" என்று நிமிர்ந்து உட்கார்ந்தான்.

"அதோ பாருங்கள், அடிவானத்துக் கருகாமையில் கன்னங் கரேலென்று ஏதோ தெரிகிறது."

வடதிசையில் ஒரு நிமிஷம் கூர்ந்து நோக்கினான் ராஜநாயகம். "வேறொன்றுமில்லை. அது ஒரு பிரம்மாண்டமான படகு. நம் துறையை நோக்கித்தான் வருகிறது. நாம் இங்கே வழியில் நிற்பது உசிதமல்ல. அதோ! மேற்கே தெரிகிறது பார் ஒரு சிறு தீவு. அங்கே போய்க் கொஞ்சநேரம் மறைந்திருக்கலாம். இந்தப் படகு நம்மைக்கடந்து சென்றபின் மீண்டும் பிரயாணத்தைத் தொடருவோம்" என்று தோணியைத் திருப்பினான்.

"அதிலிருப்பவர்கள் ஏற்கெனவே நம்மைப் பார்த்து விட்டார்களோ, என்னவோ?" என்று அச்சத்துடன் மொழிந்தாள் சௌந்திரம்.

"இருக்காது. அந்தப் படகு பெரியதாயிருப்பதால் நாம் அதைப் பார்க்க முடிந்ததே தவிர, இவ்வளவு தொலைவில் அவர்கள் நம் படகைக் காணுவதே துர்லபம்" என்று ராஜநாயகம் சௌந்திரத்துக்குத் தைரியமூட்டினான்.



அத்தீவின் ஓரத்திலும் மரங்களின் நிழல் படிந்திருந்தது. அந்த நிழலில் படகை நிறுத்திவிட்டு இருவரும் இறங்கினர். சில நிமிஷங்களுக்கெல்லாம் அவர்கள் கண்ணெதிரே அப்பெரிய படகு சென்றது. அதனுள்ளிருந்த பிரயாணிகளையும் ஓரளவு தெளிவாய்ப் பார்க்க முடிந்தது. ஆட்டு மந்தையைப் போல் அநேகர் அதில் முடங்கிக் கிடந்தனர். மங்கலாக ஒரு மண்ணெண்ணெய் விளக்கு வேறு நிலவைப் பரிகசித்துக் கொண்டு எரிந்தது. கரையை நெருங்கி விட்டதனால் தானோ என்னவோ, பிரயாணிகள் உறங்கவில்லை.

இருந்தாற் போலிருந்து 'ஆ!' வென்றான் சௌந்திரம்.

"அதோ படகின் பின் கோடியில் உயரமாயிருக்கும் பீடத்தின் மேல் யாரோ உட்கார்ந்திருக்கிறார்களே, கவனித்துப் பாருங்கள். அது என் அப்பா மாதிரியல்லவா தோன்றுகிறது?" என்றான்.

இருவரும் கண்ணைக் கசக்கிக்கொண்டு பார்த்தனர். சந்தேகமில்லை; அது சாக்ஷாத் மருதமுத்துவேதான்.

இவன் இங்கெப்படி வந்தான்? 'ஒரு முக்கிய வேலையிருக்கிறது இரண்டு நாளில் திரும்பி வருகிறேன்' என்று மகளிடம் சொல்லி விட்டுப் போனான். கடல் கடந்து செல்லும்படி அவ்வளவு பிரமாதமான வேலை எதுவாயிருக்கும்?

அது போகட்டும். அங்கே உட்கார்ந்து கொண்டு நாலாபுறமும் விறைக்க விறைக்கப் பார்க்கிறானே, ஏன்? அந்தப் பார்வையிலும் சந்தேகமும் பயமும் மலிந்து கிடக்கின்றன. ஒரு திருடன்தான் அப்படி விழிக்கக் கூடும். அவனுடைய குறுகுறுக்கும் நெஞ்சை அந்த விழியே காட்டிக் கொடுத்தது.

தான் மட்டும் குற்றமற்றவனா? கன்னியை அபகரித்துச் செல்லும் கள்வனல்லவா? தன் நெஞ்சம் குறுகுறுப்பதை உணர்ந்தான் ராஜநாயகம். மருதமுத்து ஒருகால் தங்களைக் கண்டு விட்டானோ என்று கூட எண்ணினான். அதற்குள் அந்தப் படகு சற்றுத் தூரம் சென்று விட்டது. ராஜநாயகமும் சௌந்தரமும் ஆழ்ந்த பெருமூச்சு விட்டனர்.

திடீரென்று கிளம்பியது ஓர் ஓசை. தூரத்திலிருந்து வந்த போதிலும் அந்த 'ஜிகு ஜிகு' சப்தம் இன்னதென்று அவனுக்கு உடனே புரிந்தது. அது ரோவிப் படகுகளின் எஞ்சின் செய்யும் ஒலி. நிமிஷத்துக்கு நிமிஷம் வேகமாகச் சமீபித்துக் கொண்டிருந்தன இரண்டு படகுகள். முதற் படகு வந்த அதே திசையிலிருந்துதான் இவையும் வந்தன.

ஒரு ரோவிப் படகிலிருந்த சிங்களப் போலீஸ்காரன் ஒருவன் தன் வாயருகே ஒரு பெரிய தகர ஒலி பெருக்கியைப் பிடித்துக் கொண்டிருந்தான். ஒரு மகத்தான உத்தரவை அதன் மூலம் பரப்புவதற்குப் போதுமானபடி மூச்சைச் சேகரம் செய்து கொண்டிருந்தான் போல் தோன்றியது. மறு கணம், "ஏய், படகை நிறுத்துங்கள்" என்ற உத்தரவும் கிளம்பி விட்டது.

இருளில் மறைந்து நின்ற அவ்விரு காதலர்களுக்கும் நிலாவொளியில் நடப்பது தெளிவாய்த் தெரிந்தது. ஏற்கெனவே ரோவிப் படகின் ஒலியால் கலவரமடைந்து விட்ட பிரயாணிகள் தம் பெரிய தோணியிலிருந்து பரபரப்புடன் எட்டிப் பார்த்தனர். மருதமுத்துவின் முகமோ வெளுத்து, விழி பிதுங்கிப் பயங்கரமாக மாறியிருந்தது. சற்று முன்தான் அவனது அச்சத்துக்குக் காரணம் எதுவாயிருக்குமென்று வியந்த ராஜநாயகத்துக்கு இப்போது உண்மை விளங்கியது. இதே போலீஸ்காரர்களின் வரவை எண்ணித்தான் அவன் பயந்திருக்கிறான்.

அப்படி மருதமுத்து செய்த குற்றம்...?

அகன்ற கடற்பரப்பின் மீது மறுபடி போலீஸ்காரனின் குரல் மிதந்து வந்தது:

"மருதமுத்து என்பது யார்?"

"நான்தான்..." என்று ஈனஸ்வரத்தில் பதில் கொடுத்து விட்டு உடனே உதட்டைக் கடித்துக் கொண்டான் அவன். வாயை மூடிக் கொண்டாவது இருந்திருக்கலாம். அதற்குள் பீதியில் உளறி விட்டான்.

"இந்தியாவிலிருந்து ஆட்களையும் சரக்குகளையும் கள்ளத்தனமாய்ப் பதுக்கி இலங்கைக்குக் கொண்டுவர முயன்ற குற்றத்துக்காக உன்னைக் கைது செய்கிறோம். இதோ இரகசியப் போலீஸின் வாரண்ட்" என்றது ஒலி பெருக்கி.

விலங்குகள் கலகலக்கும் சத்தம். ரோவிப்படகுகள் மருதமுத்து இருந்த படகை இன்னும் நெருங்கின.

படகிற்குள் நிமிஷத்துக்கு நிமிஷம் கலவரம் அதிகரித்தது. "அட பாவி! நல்ல வேலை வாங்கித் தருவதாகச் சொல்லி எங்களை ஏமாற்றிப் பணத்தைப் பறித்து இங்கே அழைத்து வந்து விட்டாயே" என்று எல்லோரும் ஏகோபித்து அலறி மருதமுத்துவைப் பழித்தார்கள். அருகில் போலீஸ் மட்டும் நின்றிராவிட்டால் அவனைக் கிழித்தே கடலில் எறிந்திருப்பார்கள்.

"இந்த அயோக்கியப் பயலைக் கைது செய்து கொள்! கழுவில் வேண்டுமானால் ஏற்று. இவனை நம்பி வந்த எங்கள் கதி என்னவாவது?" என்று போலீஸ்காரர்களை நோக்கிக் கேட்டான் ஒரு பிரயாணி.

"உங்களுக்கு அபராதம் போடுவார்கள்; அப்புறம் வந்த மாதிரியே திரும்ப இந்தியாவில் கொண்டு விட்டு விடுவார்கள்... உம் ஏன் தாமதம்? படகு நகரட்டும்."

ஆயிரம் சாபங்களைத் தலைமேல் வாங்கிப் போட்டுக் கொண்டு மருதமுத்து தொங்கிய முகத்துடன் உட்கார்ந்திருந்தான். ஒரு போலீஸ்காரன் அவன் கைகளில் விலங்கை மாட்ட முயன்றான்.

என்ன இருந்தாலும் பெற்ற தகப்பன்! அவன் கைகளில் விலங்கு ஏறுவதைக் கண்ணால் கண்டதும் சௌந்திரத்தின் உள்ளம் பதைத்தது "ஐயோ!" என்று அலறத் தொடங்குவதற்குள் ராஜநாயகம் அவள் வாயை இறுகப் பொத்தி விட்டான்.

"அவரை ஜெயிலுக்குக் கொண்டு போய் அடைத்து விடுவார்களே" என்று விம்மினாள் சௌந்திரம்.

'அங்கேதான் கொஞ்ச நாள் இருந்து விட்டு வரட்டுமே, வீட்டிலும் சமைத்துப்போட ஆள் கிடையாது.........' என்று ராஜநாயகம் நினைத்துக் கொண்டான். அதற்குள் அவனே திடுக்கிடும்படியான சம்பவம் ஒன்று நிகழ்ந்தது.

படகின் மேல் தளத்தில் விலங்கு பூட்டிய கைகளுடன் நின்ற மருதமுத்து ஆவேசம் வந்தவன் போல் உரக்கக் கத்தத் தொடங்கி விட்டான். "சௌந்திரம்! என் ஆசை மகளே! உன்னை அநாதை போல் விட்டு நான் சிறைக்குப் போகிறேனே! என் பேராசை குறுக்கே நின்று உன் சந்தோஷத்தில் மண்ணைப் போட்டு விட்டதே. ஏழை என்பதற்காக அந்தப் பையன் ராஜநாயகத்தை அவமதித்துத் துரத்தியடித்தேன். அவனுக்கே உன்னை மனைவியாகக் கொடுத்து உங்கள் இன்ப வாழ்க்கையைப் பார்க்க விடவில்லை என் கெடுமதி!" என்று அரற்றிக் கொண்டு கைகளால் தலையில் ஓங்கி ஓங்கி அறைந்து கொண்டான். விலங்குகள் மண்டையில் பட்டு ஒலித்ததோடல்லாமல் ரத்தம் வேறு வரச் செய்தன. மருதமுத்துவைத் தடுத்துச் சமாதானம் செய்வதற்குள் அந்தப் போலீஸ்காரன் பாடு திண்டாட்டமாகிவிட்டது.

ராஜநாயகத்தின் உள்ளமும் நெகிழ்ந்தது. எவ்வளவு திடசித்தன், எது வரினும் அஞ்சாத முரடன் என்று தான் கருதியிருந்த மருதமுத்து தன் வயமிழந்து இப்படிக் கதறியதைப் பார்த்தபின் அவனது துவேஷம் கரைந்து விட்டது. ஆனால் அந்நிலையில் அவனால் செய்யக் கூடியது என்ன இருக்கிறது. அருகில் 'அப்பா ... அப்பா' என்று விசித்து அழுது கொண்டிருந்த சௌந்திரத்தைத் தேற்ற முயல்வதைத் தவிர?



"வாசலில் யாரோ ஒரு ஆள் வந்திருக்கிறான். உங்களைப் பார்க்க வேண்டுமாம்."

"யார் என்று கேள்!"

"உங்களிடம்தான் சொல்லுவானாம். மீசை, தாடி வைத்துக் கொண்டிருக்கிறான்!"

"எனக்கு மீசை தாடி வேண்டாம் என்று சொல்லிப் போகச் சொல்லு!"

நீராவிப் படகுகளின் 'ஜிகு ஜிகு!' சப்தம் எழுந்து மருதமுத்துவின் கதறலை அமுக்கி விட்டது. காதலர்கள் மீண்டும் தலைநிமிர்ந்து நோக்கு முன் அம்மூன்று படகுகளும் தூரத்தில் சென்று விட்டன.

"சௌந்திரம், இனியும் நாம் இங்கு தாமதிப்பது உசிதமல்ல. வா, நம் பிரயாணத்தைத் தொடரலாம். பொழுது விடியுமுன் இலங்கைக் கடற்கரையிலிருந்து குறைந்தது பத்துமைல் தூரமாவது தாண்டிவிட வேண்டும்" என்று மொழிந்தான் ராஜநாயகம். அடுத்த நிமிஷம் அச்சிறு படகும் தன் நீண்ட யாத்திரையைத் தொடங்கிற்று.

அவர்களிருவருமே மௌனமாயிருந்தனர். சோகம் சூடி கொண்டிருந்த உள்ளங்களிலும் ஒரு அமைதியிருந்தது.

மருதமுத்து தங்களைத் தொடர்ந்து பழி வாங்க மாட்டான் என்பதல்ல அவ்வமைதிக்குக் காரணம்.

கடைசி நிமிஷத்திலாவது தன் தவறையுணர்ந்து பச்சாதாபப் படுகிறானே, அது தங்கள் மணத்திற்கு அனுமதியளித்து விட்ட மாதிரிதான்; இனி நிம்மதியாக இந்தியா சென்று தம்பதிகளாகலாம் என்ற எண்ணமே அவர்களுடைய மன அமைதிக்குக் காரணம்.

இருவர் கண்களும் சந்தித்த சமயத்தில் தன்னையறியாமல் ஒரு புன்முறுவல் பூத்தாள் சௌந்திரம்.

ராஜநாயகம் நினைத்துக் கொண்டான்:- 'என் சௌந்திரத்துக்கென்ன? அழுதாலும் சிரித்தாலும் அவள் அழகாய்த்தானிருக்கிறாள். நான் பாக்கியசாலிதான்!'



சுசீலா கிப்ஸ் உபயோகிக்கிறாள்
அவள் அழகான பற்களைப் பெறுவாள்
1
சுசீலா தனது கிப்ஸ் டென்டிபிரிஸின் அழகான டப்பியையும், இனிய புதிய மணத்தையும் விரும்புகிறாள்.
2
அவள் பிரஷை தண்ணீரில் நனைத்து கிப்ஸ் டென்டிபிரிஸ் கட்டியில் தேய்க்கிறாள்.
3
அவள் எல்லா பற்களையும் தேய்க்கிறாள். (மேலும் கீழுமாக) உள்ளும் வெளியும் சுத்தம் செய்கிறாள்.
4
பிறகு தண்ணீரால் வாயை கொப்புளிக்கிறாள். இப்பொழுது கிப்ஸ் உபயோகிப்பதால் அது அழகான பற்களைப் பெற உதவும்.
உங்கள் குழந்தைகளும் கிப்ஸ் உபயோகிக்கிறார்களா?
கரகரப்பான சுத்தம் செய்யும் வஸ்துக்கள், சாம்பல், கரி இவை போன்றவை, குழந்தைகளின் பற்களுக்கு ஊறுவிளைவிக்கலாம். உங்கள் குழந்தைகளை சிறுவயதிலிருந்தே கிப்ஸ் டென்டிபிரிஸை உபயோகிக்கச்செய்யுங்கள். அவர்கள் பெரியவர்களானதும் வெண்மையான குற்றமற்ற பற்களைப்பெறுவார்கள். நுரைபோல் மிருதுவான கிப்ஸ் பற்களுக்கோ ஈறுகளுக்கோ ஒருபொழுதும் கெடுதல்செய்வதில்லை. குழந்தைகளும் பெரியவர்களைப் போலவே, கிப்ஸை விரும்புகிறார்கள். அதற்கு காரணம் கிப்ஸின் இனிய புதிய வாசனையும், தேர்ந்தெடுக்க 3 கவர்ச்சிகரமான வர்ணங்களிலுள்ள டப்பிகள் இருப்பதினாலும்தான்.
கிப்ஸ் டென்டிபிரிஸ்
ஒழுங்கான முறையில் பற்களை வெண்மையாக சுத்தம் செய்கிறது
Gibbs
DENTIFRICE
GD-24-172 TM

# ரமணியின் ஜெயம்

பி. எஸ். மணி

"தீபாவளி நெருங்கி விட்டதே! ஏதாவது வாங்குவதாக உத்தேசம் உண்டா?" என்று கேட்டுக் கொண்டே சுந்தரமய்யரிடம் வந்தாள் அம்புஜம்.

"இன்னும் தீபாவளிக்கு ஒரு வாரமிருக்கிறதே? அதற்குள்ளே என்ன அவசரம்?" என்றார் சுந்தரமய்யர்.

"அதற்காகச் சொல்லவில்லை. நீங்கள் எனக்குப் புடவை வாங்காவிட்டாலும் பரவாயில்லை. ஆனால் அந்தப் பெண் ஜெயத்துக்கு மாத்திரம் ஒரு பட்டுப் புடவை வாங்கிக் கொடுத்து விடுங்கள், போதும். அந்தப் பெண் ஏற்கெனவே சங்கடப்பட்டிருக்கு. இன்னும்...!" என்றாள் அம்புஜம்.

"நம்ம நிலைமை தெரிந்தும் இப்படிச் சொல்கிறாயே? இப்பொழுது பட்டுப் புடவை வாங்கணும் என்றால் குறைந்தது நூறு ரூபாயாவது வேண்டாமா? அதற்கு எங்கே போவது?" என்று கேட்டார் சுந்தரமய்யர்.

"என்ன பண்ணுவது? உங்கள் அருமைப் பிள்ளை பாரு கைநிறையச் சம்பாதிக்கிறானே, அவனிடம் கேட்கிறதுதானே? கல்யாணமாகித் தனிக்குடித்தனம் போனபிறகு இத்தனை நாளாகி விட்டதே? ஒரு தடவையாவது நமக்கு உதவி செய்திருக்கிறானா? பெற்ற தாயாரையும், தகப்பனாரையும் மறந்து எல்லாம் 'பெண்டாட்டியாத்தா, பெரியாத்தா' என்ற கதையாக மாறிவிட்டானே? அவனிடம் வேண்டுமானால் கேட்டுப் பாருங்களேன்" என்று அடுக்கினாள் அம்புஜம்.

"ஆமாம்! அவனுக்கும் குழந்தை குட்டிகள் இல்லையா, என்ன? அது இருக்கட்டும். அந்தப் பெண் ஜெயத்துக்கு, இருக்கிற சொத்தையெல்லாம் அழித்து வரதட்சிணை கொடுத்துக் கல்யாணம் பண்ணி வைத்தேன். அப்புறம் தொந்தரவு நீங்கி விட்டது என்று நினைத்தால் அவள் அகத்துக்காரரோடு நன்றாயிருந்ததையும் கெடுத்துக் குட்டிச் சுவராக்கி விட்டாயே!" என்று கோபத்துடன் கூறினார் சுந்தரமய்யர்.

கூடத்தில் ஏதோ புத்தகம் ஒன்றை வைத்துப் புரட்டிக் கொண்டிருந்த ஜெயத்தின் காதில் அப்பா சொன்னதெல்லாம் விழுந்து அவளுக்குப் பொறுக்க முடியாத அளவு துயரத்தை அளித்தது. அவள் மனம் சிந்தனைச் சுழலில் சுழன்றது. 'ஆமாம்! அப்பா சொன்னதில்தான் என்ன தவறு? எனக்காக எவ்வளவு செலவழித்தார்? அவ்வளவு செலவழித்து இன்னொருவரிடம் ஒப்படைத்து விட்டு என்றால் இனி ஒரு கஷ்டமும் இல்லையென்று எண்ணிக் கொண்டிருக்கும் போது கணவனுடன் சண்டை போட்டுக் கொண்டு நான் அவர்கள் வீட்டுக்கு வந்து விட்டால் அவருக்கு எப்படியிருக்கும்? எனக்குப் பட்டுப் புடவை வேண்டுமென்று நான் சொன்னேனா, என்ன? அம்மா இல்லாததும் பொல்லாததும் சொல்லி அப்பாவைக் கஷ்டப்படுத்தி விட்டாளே?' என்று நினைத்து வருந்தினாள்.

* * *

ரமணியும் ஜெயமும் அன்யோன்ய தம்பதிகள். இருவருக்கும் கல்யாணமாகி ஒரு வருஷந்தான் ஆயிற்று. கல்யாணமானதும் ரமணி தனிக் குடித்தனம் நடத்த ஆரம்பித்தான்.

ஜெயத்தின் தாயார் அம்புஜம் அவள் தனிக் குடித்தனம் நடத்துவதைப் பார்த்து விட்டுப் போவதற்காக வந்திருந்தாள். தன் பெண்ணும், மாப்பிள்ளையும் மிகவும் அன்யோன்யமா யிருப்பதைக் கண்டு அவள் அடைந்த ஆனந்தத்துக்கு எல்லையில்லை.

அன்று மாலை ஜெயத்துக்குத் தலைவாரிப் பின்னிக் கொண்டிருந்தாள் அம்புஜம். ஜெயம் தனது கணவரின் பெருமையையெல்லாம் எடுத்துக் கூறிக்கொண்டிருந்தாள்.

"அம்மா! அவருக்கு என்னிடம் எவ்வளவு பிரியம் தெரியுமோ? சம்பளம் வாங்கினதும் என்னிடம் கொடுத்து விடுவார்" என்றாள் ஜெயம் பெருமையாக.

"ஏண்டி! உன் அகத்துக்காரருக்கு என்ன சம்பளம்? ஏதாவது சேர்த்து வைத்திருக்கிறீர்களா?" என்று அக்கறையுடன் கேட்டாள் அம்புஜம்.

"எப்படியம்மா மிஞ்சும்? இந்தக் காலத்தில் வரவுக்கும் செலவுக்கும் கட்டிக் கொண்டு போனால் போதாதா? அவர் மாசம் நாற்பது ரூபாய் மாமியாருக்கு அனுப்புகிறார். என் நாத்தனார் கமலிக்குப் பள்ளிக்கூடச் சம்பளம் வேறு தனியாக மணியார்டர் அனுப்ப வேண்டியிருக்கிறது.

அவர்களுக்கும் யார் இருக்கிறார்கள்? நாங்கள் உதவி செய்தால்தானே?" என்றாள் ஜெயம் பெருமிதத்தோடு.

"ஜெயம், நீ சுத்த அசடாயிருக்கிறாயே? உன் அகத்துக்காரர் கன்னு பின்னுவென்று செலவழிக்கிறதை நீயும் மெச்சிக்கொண்டிருக்கிறாயே?" என்றாள் அம்புஜம்.

"என்ன அம்மா! இப்படிச் சொல்கிறாய்? நாங்கள் ஒன்றும் கன்னு பின்னுவென்று செலவழிக்கிறதேயில்லையே? சினிமாவுக்குக்கூடப் போகிறதில்லை. எவ்வளவு செட்டாய்க் குடித்தனம் பண்ணுகிறோம் தெரியுமோ?" என்றாள் ஜெயம் புரிந்து கொள்ளாமல்.

"ஜெயம், நான் சொல்லுகிறதைக் கவனமாய்க் கேளு. உன் மாமியாருக்கு மாதா மாதம் பணம் அனுப்பாவிட்டால் என்ன? அப்படி என்ன உன் அகத்துக்காரருக்கு இங்கே கொட்டி வைத்திருக்கிறது? இதையெல்லாம் நீதான் அவருக்கு எடுத்துச் சொல்ல வேண்டும். புருஷர்களுக்கு இந்த மாதிரி விஷயங்களெல்லாம் அவரவர் மனைவிமார்கள் சொன்னால்தான் புரியும். நான் சொன்னதை மனசிலே வாங்கிக் கொண்டு யோசனை செய்து பாரு! நாளைக்கு உனக்கு நாலு குழந்தைகள் பிறந்தால் அவைகளைக் கவனிக்க வேண்டாமோ? இப்பொழுது பணத்தை வாரி யிறைத்து விட்டால் பின்னால் உனக்கும் அவருக்கும்தான் சிரமம்!" என்றாள் அம்புஜம்.

ஜெயத்துக்குத் தன் தாயார் கூறுவது உண்மை என்றே பட்டது. 'ஆமாம்! நாளைக்கு உதவி வேண்டுமென்றால் அவர்கள் செய்வார்களா? இன்று அவர் கொடுக்கிறதனால் என்னையும் அவரையும் கொண்டாடுகிறார்கள். நாளைக்கு ஒன்றுமில்லாமல் போய் விட்டால்...?' இப்படிப் பல எண்ணங்கள் அவள் உள்ளத்தில் தோன்றி மறைந்தன. எப்படியாவது தன் கணவனைச் சரிப்படுத்தி மாமியார் வீட்டுக்குப் பணம் அனுப்புவதை நிறுத்தச் செய்ய வேண்டும் என்று தீர்மானித்தாள்.



அன்று ரமணி ஆபீசுக்குப் புறப்பட்டுக் கொண்டிருந்தான். ஏதோ ஞாபகம் வந்தவனாய், "ஜெயம்! ஜெயம்!" என்று கூப்பிட்டான். எப்பொழுதும் கூப்பிட்டவுடனே ஓடி வருபவள் அன்று மெதுவாக வந்தாள். வந்தவள் அசிரத்தையாக, "ஜெயத்துக்கு என்னவாம்?" என்று கேட்டது அவனுக்கு மிக ஆச்சரியத்தை விளைவித்தது.

"ஜெயம்! இருபது ரூபாய் பணம் இருந்தால் தருகிறாயா?"

"தருகிறேன். ஆனால்......!"

"ஆனால் என்ன?"

"உங்களுக்கு எதற்காகப் பணம் வேண்டும் என்று காரணத்தைச் சொன்னால்...!"

"காரணம் வேறு சொல்ல வேண்டுமா? உன் நாத்தனார் கமலிக்குப் புத்தகங்கள், ஏதோ வாங்க வேண்டுமென்று எழுதியிருக்கிறாள். அதற்குத்தான்......" என்று இழுத்தான் ரமணி.

"ஆமாம்! அவர்களுக்கும் வேறு வேலை கிடையாது போலிருக்கிறது. எப்பொழுது பார்த்தாலும் பணத்துக்கு எழுதி விடுகிறார்கள். இங்கே பணம் கொட்டிக் கிடக்கிறது என்கிற எண்ணம் போலிருக்கிறது!" என்றாள் ஜெயம் கோபத்துடன்.

இந்தப் பதில் ரமணிக்குத் தூக்கி வாரிப் போட்டது. சிறிது நேரம் அப்படியே திகைத்துத் திக்பிரமை பிடித்தவன் போல் நின்றான். 'ஜெயமா இப்படிப் பேசுகிறாள்? ஆச்சரியமாயிருக்கிறதே? எத்தனையோ தடவை அவளே என்னை நச்சரித்துப் பணம் அனுப்பச் சொல்லியிருக்கிறாளே? இதற்கு முன்பு பணம் கேட்டால் காரணம் கேட்டிருக்கிறாளா? இல்லையே! ஆனால் இன்று...! இப்படி அவள் பேசுவதற்குக் காரணம்?' என்று பல கேள்விகள் அவன் மனதில் எழுந்து குழப்பத்தை விளைவித்தன.

"என் ஜெயம்! உனக்குக் கமலி மீது இப்படி அசூயை பிறந்து விட்டது? என்றைக்குமில்லாத பேரிடியை இன்றைக்குத்

தூக்கிப் போட்டு விட்டாயே?" என்று கேட்டான் ரமணி.

"எனக்குக் கமலி மீது ஒரு அசூயையும் இல்லை. ஆனால் நீங்கள் இப்படிச் சம்பாதித்த பணத்தையெல்லாம் அவர்களுக்குக் கொண்டு போய்க் கொட்டுவதுதான் எனக்குப் பிடிக்கவில்லை. நாளைக்கு நமக்குக் குழந்தை குட்டிகள் உண்டானால் அவைகளைக் காப்பாற்ற வேண்டாமா? நாம் நடுத் தெருவில் நின்றால் அவர்கள் கவனிப்பார்களா?" என்றாள் ஜெயம்.

இதைக் கேட்டதும் ரமணிக்கு வந்த கோபத்துக்கு அளவில்லை. "ஆமாம்! நான் சம்பாதிக்கிறேன். என் தாயாருக்கும், தங்கைக்கும் கொடுக்கிறேன். அதை நீ ஒன்றும் கேட்க வேண்டியதில்லை" என்று படபடவென்று கூறினான் ரமணி.

"நான் கேட்க வேண்டியதில்லையென்றால் என்னை நீங்கள் கல்யாணம் செய்து கொண்டிருக்க வேண்டாமே?" என்றாள் ஜெயம். அவள் கண்களிலிருந்து கண்ணீர் முத்து முத்தாக உதிர்ந்தது.

"சனியனே! இருபது ரூபாய் பணம் அனுப்புவதற்கு இவ்வளவு தகராறு செய்கிறாயே? இன்னும் ஒரு வாரத்தில் கமலியே இங்கே வந்து விடப் போகிறாள். அவளை இங்கேயே காலேஜில் சேர்த்து விடப் போகிறேன். அப்பொழுது என்ன செய்வாய்?" என்றான் ரமணி.

"கமலி வரும்வரை நான் இங்கிருப்பேன் என்று நினைத்துக் கொண்டிருக்கிறீர்களா? நான் தான் இன்றைக்கே பிறந்தகம் போய் விடப் போகிறேனே? உங்கள் வார்த்தைகளிலிருந்தே நீங்கள் என்னிடம் பிரியமாயில்லையென்று தெரிந்து விட்டது. இனி எனக்கு இங்கு என்ன வேலை?" என்றாள் ஜெயம் பொறுக்க முடியாமல். அவள் நெஞ்சம் விம்மியது; துக்கம் தொண்டையை அடைத்தது. அதற்கு மேல் அவளால் அங்கு நிற்க முடியவில்லை. கண்களில் கண்ணீர் மல்கச் சமையலறைக்குச் சென்றுவிட்டாள். ரமணியும் ஆபீஸுக்கு நேரமாகி விட்டதால் அங்கிருந்து புறப்பட்டுப் போய் விட்டான்.

ஜெயத்துக் கேற்பட்ட கோபமும் வருத்தமும் அவள் மன அமைதியைச் சீர்குலைத்து, பின்னால் வரும் விபரீதங்களைச் சிந்தித்துப் பார்க்க இடம் கொடுக்கவில்லை. அவள் அன்றே பிறந்தகம் புறப்படத் தீர்மானித்து விட்டாள். தன் பெட்டி, படுக்கைகளைக் கட்டித் தயாராக வைத்துக் கொண்டாள்.

மாலையில் ரமணி வந்ததும், "இந்தாருங்கள் உங்கள் கொத்துச் சாவி. நான் பிறந்தகம் போகிறேன். என்னை ரயிலேற்றி மட்டும் விட்டு விடுங்கள்" என்றாள் ஜெயம் தீர்மானமாக.

ரமணி பதிலே சொல்லவில்லை. அவள் பிடிவாதமாக இருக்கவே, வேறு வழியின்றி அவளைப் பிறந்தகத்துக்கு ரயிலேற்றி அனுப்பி விட்டான்.

* * *

ஜெயம் பழைய நிகழ்ச்சியையும் இன்றையச் சம்பவத்தையும் ஒப்பிட்டுப் பார்த்தாள். 'அவர் என் நாத்தனார் கமலிக்குப் பணம் அனுப்புவது பொறுக்க முடியாமல் தானே அவரோடு வீணாகச் சண்டை போட்டுக் கொண்டு இங்கு வந்தேன்? இப்பொழுது அம்மா என்ன சொல்கிறாள்? அண்ணா தன் குடும்பத்துக்குப் பணம் கொடுக்காததைச் சுட்டிக் காட்டித் திட்டுகிறாளே? அதே மாதிரிதானே என் மாமியாருக்கும், நாத்தனாருக்கும் இருக்கும்? இதைப் பெரிதாக நினைத்து அம்மா பேச்சைக் கேட்டுச் சண்டை போட்டுக் கொண்டு வந்து விட்டேனே? என்ன இருந்தாலும் 'கல்லானாலும் கணவன் புல்லானாலும் புருஷன்தானே?' அவரவர்களுக்கு அந்த அந்த இடத்தில் இருந்தால்தானே மதிப்பு? அன்றைக்கு வீணாகச் சண்டை போட்டுக் கொண்டு வராமலிருந்தால் இன்றைக்கு இந்தச் சங்கடமெல்லாம் அனுபவிக்க வேண்டியிராதே? என்ன இருந்தாலும் பட்டால் தானே தெரியும்...!' இப்படிப் பல மனப் போராட்டங்களுக்கு மத்தியில் அவள் கடைசியாக ஒரு தீர்மானத்துக்கு





"என்ன ஸார்! இந்த இரண்டு 'போட்டோ'வும் உங்களுடைய மாப்பிள்ளையுடையதுதானே? முதல் படத்தை ஏன் தலைகீழாக மாட்டியிருக்கிறீர்கள்?"

"அதுவா? முதல் படம் எடுக்கும்போது எங்கள் மாப்பிள்ளை தலைகீழாக நின்றகாலம் ஸார், அது!"

---

வந்தாள். தன் கணவனிடம் சென்று தன் குற்றத்துக்கு மன்னிப்புக் கேட்டுக் கொள்ளுவது என்பது தான் அவள் முடிவு.

உடனே ஜெயம் தன் தந்தையிடம் சென்றாள். "அப்பா! இப்பொழுதே என்னை என் கணவரிடம் கொண்டு போய்ச் சேர்த்து விடுங்கள். இங்கே ஒரு கணமும் தங்க முடியாது. எப்படியானாலும் அவர் காலில் விழுந்து என் குற்றத்துக்கு மன்னிப்புக் கேட்டுக் கொள்ளுகிறேன். என்னை இன்றே அவரிடம் கொண்டு போய்ச் சேர்த்து விடுங்கள்" என்றாள் ஜெயம்.

"ஜெயம்! அவசரப்படாதே! தீபாவளி கழிந்த பிறகு புறப்பட்டு விடலாமே!" என்றார் சுந்தரமய்யர் தம் மகளைப் பார்த்து.

ஆனால் ஜெயம் அவருடைய சமாதானத்துக்கு இசையவேயில்லை. தீர்மானமாக அன்றே தன் கணவன் வீட்டுக்குப் போக வேண்டும் என்று பிடிவாதம் பிடித்தாள். அவள் தாயார் அம்புஜம் எவ்வளவோ காரணங்கள் கூறித் தடுத்துப் பார்த்தும் அவள் கேட்கவில்லை. சுந்தரமய்யருக்குத் தம் பெண் பிடிவாதம் பிடித்தால் அதைக் கடைசி வரை நிறைவேற்றி விடுவாள் என்பது தெரியும். ஆகையால் அவர் மறு பேச்சுப் பேசாமல் அவள் கணவன் வீட்டில் கொண்டு போய்ச் சேர்க்க இசைந்தார்.

ரயிலில் ஏறியதும் ஜெயத்துக்கு மனம் 'திக் திக்' கென்று அடித்துக் கொண்டது. ஒருவேளை தன் கணவன் நிராகரித்து விடுவானோ என்ற காரணத்தினால்தான். தன் கணவன் தன்னை ஏற்றுக் கொள்ள வேண்டுமே என்பதற்காகப் பல தெய்வங்களை வேண்டிக் கொண்டாள். சென்னை வரும் வரை அவள் மனம் பட்டபாடு கொஞ்ச நஞ்சமல்ல.

• • •

ஜெயம் மறுநாள் காலையில் தன் கணவன் வீட்டுக்குத் தகப்பனாருடன் வந்து சேர்ந்தாள். மிகுந்த அதைரியத்தோடும், பயத்தோடும் வீட்டினுள் நுழைந்தாள். இன்னும் ரமணி தூங்கிக் கொண்டிருந்தான். கூடத்தில் எல்லாச் சாமான்களும் அங்கும் இங்குமாக இறைந்து கிடந்தன. புழக்கடையில் வேலைக்காரி வேலம்மாள் பாத்திரங்களைத் துலக்கிக் கொண்டிருந்தாள். ஜெயம் வந்திருப்பதைக் கண்டதும், அவள் ஓடோடி வந்து, "என்ன அம்மா! இப்பத்தான் வந்தீர்களா? ஐயா நீங்கள் இல்லாமே ஒரு மாசமா எவ்வளவு சங்கடப்பட்டாங்க, தெரியுமா? இப்பொழுதாவது மனசு வைச்சுத் திரும்பி வந்தீங்களே?" என்றாள். ஜெயம், தன் கணவன் என்ன சொல்லுவானோ, ஒருவேளை தன்னை ஏற்றுக்கொள்ள மறுத்து விடுவானோ என்ற பயத்தில் ஆழ்ந்திருந்ததால் அவளுடைய கேள்விக்குப் பதிலே சொல்லவில்லை.

சமையலறைக்குள் சென்று காப்பி போடுவதில் முனைந்தாள் ஜெயம். கைகள்தான் ஏதோ யந்திரம்போல் வேலை செய்தனவே தவிர அவள் மனம் பூராவும் கணவனைப் பற்றிய சிந்தனையிலேயே லயித்திருந்தது. காப்பியை முதலில் தன் தகப்பனாருக்குக் கொடுத்துவிட்டுப் பிறகு தன் கணவருக்கும் ஒரு பாத்திரத்தில் காப்பி எடுத்துக்கொண்டு அவர் அறைக்குள் சென்றாள். மெதுவாகப் பக்கத்திலிருந்த பெஞ்சியில் காப்பியை வைத்துவிட்டுத் திரும்பினாள். பெஞ்சியில் காப்பி டம்ளரை வைக்கும்போது 'டக்' கென்று சத்தம் கேட்டது. ஏதோ சத்தம் கேட்டதைக் கண்டதும் ரமணி திடுக்கிட்டு விழித்தெழுந்தான். எதிரே சூடான காப்பி அவனை 'வா, வா' வென்று அழைத்தது. தூரத்தில் ஜெயம் பயத்தோடு நின்றுகொண்டிருப்பதைக் கண்டான். அவளைக் கோபத்துடன் கடிந்துகொள்ள வேண்டும் என்று

தோன்றியது. கதிரவனின் ஒளியை மேகம் சில சமயம் மறைத்து விடுவதுபோல அவனது கோபாக்கினியை ஒரு மாத காலமாக அவளில்லாமல் பட்ட கஷ்டங்களாகிய மேகங்கள் அவன் முன் தோன்றி மறைத்து விட்டன. அவனால் அவளைக் கோபித்துக் கொள்ள முடியவில்லை. அதற்குப் பதிலாக அவன் முகத்தில் சந்தோஷக் களை தாண்டவமாடியது.

ஜெயம் தன் கணவர் கோபிக்காமல் தன்னை மகிழ்ச்சியுடன் ஏற்றுக் கொண்டதை யறிந்ததும் அவள் அடைந்த ஆனந்தத்துக்கு அளவில்லை. அவள் முகத்தில் குடி கொண்டிருந்த பயமும், சோகமும் சூரியனைக் கண்ட பனி போல விலகின.

சுந்தரமய்யர் இச்செய்தி யறிந்ததும் மகிழ்ச்சிக் கடலில் மூழ்கினார். அந்த மகிழ்ச்சியில் அன்றே ஊருக்குக் கிளம்பி விடத் தீர்மானித்தார். ஜெயமும், ரமணியும் "தீபாவளிக்குக் கட்டாயம் இருந்து விட்டுப் போக வேண்டும்" என்று வற்புறுத்தியதையும் பொருட்படுத்தாமல் ஊர் திரும்பினார்.

* * *

தீபாவளிக்கு இன்னும் மூன்று நாட்கள் இருந்தன. ரமணி சாப்பிட்டுவிட்டு ஆபீஸுக்குச் சென்று விட்டான். ஜெயமும் சாப்பிட்டுவிட்டுக் கூடத்தில் வந்து உட்கார்ந்து ஏதோ பின்னல் ஒன்றைப் போட்டுக் கொண்டிருந்தாள். அச்சமயத்தில் தபால்காரன் ஒரு கார்டை அவர்கள் வீட்டில் போட்டுவிட்டுப் போனான்.

கமலிதான் எழுதி யிருந்தாள். அதை எடுத்து வாசித்தாள். கீழ்க்கண்டவாறு எழுதி யிருந்தது:

திருச்சி
5—11—50

அன்புள்ள அண்ணாவுக்கு,

நமஸ்காரம். தீபாவளி நெருங்கிக் கொண்டிருக்கிறதே? நீ ஒன்றும் பணம் அனுப்பவில்லையே? எங்கள் மீது உனக்குக் கோபமா? தயவு செய்து இந்தக் கடிதம் கண்டதும் தீபாவளிச் செலவுக்கு ஐம்பது ரூபாய் அனுப்பி வைக்க வேண்டுகிறேன். அம்மா சௌக்கியமா யிருக்கிறாள்.

அன்புள்ள,
கமலி.

ஜெயம் அந்தக் கடிதத்தைப் படித்து முடித்ததும் அடைந்த ஆனந்தத்துக்கு எல்லையில்லை. ஆம், அவள் தன் கணவனை எப்படியாவது திருப்திப்படுத்த வேண்டும் என்று எண்ணிக் கொண்டிருந்தாள். அதற்குத் தக்க சமயம் வாய்த்ததை அறிந்ததும் அவள் சந்தோஷப் படாமலிருக்க முடியுமா?

உடனே அவளுக்கு ஒரு யோசனை தோன்றியது. ரமணி அவளுக்குப் பட்டுப் புடவை வாங்குவதற்காக இருநூறு ரூபாய் பணம் அவளிடம் கொடுத்து வைத்திருந்தான். அதில் ஐம்பது ரூபாய் கமலிக்கு அனுப்பி வைத்தாலென்ன? என்று தோன்றியது. உடனே அவள் பக்கத்து வீட்டு அம்பியை அழைத்து, "அம்பி! நான் ஐம்பது ரூபாய் தருகிறேன். இந்த விலாசத்துக்கு மணியார்டர் பண்ணி விடு" என்று கூறி ஐம்பது ரூபாயையும், கமலியின் விலாசத்தையும் கொண்டு வந்து அம்பியிடம் கொடுத்தனுப்பினாள்.

பிறகு அவள் ரமணியை எதிர்பார்த்துக் கொண்டு காத்திருந்தாள்.

மாலையும் வந்தது. ரமணி ஆபீஸிலிருந்து வந்து விட்டான். வந்ததும் அவன் கண்ணில் கமலியின் கடிதம் தான் பட்டது. ஜெயம் தான் அதை மேஜையில் தெரியும்படியாக வைத்திருந்தாளே! அதை எடுத்து வாசித்துப் பார்த்தான் ரமணி. கமலி பணம் அனுப்பச் சொல்லி எழுதி யிருப்பதைக் கண்டதும் அவன் மனம் சிந்தனையில் ஆழ்ந்தது.

ஜெயம் தனது கணவன் வந்து விட்டதை யறிந்ததும் உள்ளத்தில் உவகை பொங்கக் காப்பியை எடுத்துக் கொண்டு அவன் அறைக்கு வந்து சேர்ந்தாள். ரமணி உணர்ச்சியே இல்லாமல் அவள் கையிலிருந்து காப்பியை வாங்கி அருந்தினான்.

இச்சமயத்தில் அடுத்த வீட்டு அம்பி, "மாமி! காலையில் ஐம்பது ரூபாய் மணியார்டர் அனுப்பச் சொன்னீர்களே, அதற்கு ரசீது இந்தாருங்கள்!" என்று சொல்லிக் கொண்டே ரசீதை ஜெயத்தினிடம் கொடுத்து விட்டுத் திரும்பிப் போய் விட்டான்.

"ஜெயம்! யாருக்கு ஐம்பது ரூபாய் அனுப்பினாய்? கமலிக்கா?" என்று ஆச்சரியத்துடன் கேட்டான் ரமணி.

"ஆமாம்!" என்று தலையசைத்தாள் ஜெயம்.

ஜெயத்தின் எதிர்பாராத மாறுதலைக் கண்டு ரமணி திடுக்கிட்டுப் போய்விட்டான். அவளுடைய திடீர் மாறுதலுக்குக் காரணம் அவனுக்குப் புரியவில்லை. 'கடலின் ஆழத்தை வேண்டுமானாலும் அளந்து தெரிந்து கொண்டுவிடலாம். ஆனால் பெண்களின் மன ஆழத்தைப் புரிந்து கொள்வது என்பது முடியாத காரியம்' என்று அவன் வாய் முணுமுணுத்தது.

# ஆரோக்கிய ரகசியம்

வி. என். குமாரசாமி

## 17. பெண்மணிகளுக்கு

ஆரோக்கியமாக வாழ்வதற்கு அஸ்திவாரமிடுபவர்கள் பெண்கள்தான்.

“நிலத்தின் தன்மை பயிர்க்குளதாகுமாம்......” என்று பாரதியார் சொன்னது போல் தாய் எத்தகைய உடல் படைத்திருக்கிறாளோ அதைப் போலத்தான் குழந்தைகள் இருக்கும். ஆகவே ஆண்களை விடப் பெண்கள் நோயில்லாமல் ஆரோக்கியமாய் இருக்க வேண்டியது மிக மிக அவசியமாகிறது. ஆனால் நடைமுறையில் பார்க்கப் போனால் பெண்கள் தான் மிகவும் பலவீனமாகவும், நோயாளிகளாகவும் இருக்கின்றனர். இன்று மருந்துக்காகச் செலவாகும் பணத்தில் பெரும் பகுதி பெண்களால் ஏற்படுவதுதான்.

அவர்களுக்குச் சரியான தேகப் பயிற்சி கிடையாது. தேகப் பயிற்சி செய்ய வேண்டும் என்ற உணர்ச்சியும் கிடையாது. பெண்கள் தேகப் பயிற்சி செய்யலாம் என்பது அநேகருக்குத் தெரியாது. ஆண்களுக்கே தேகப் பயிற்சி செய்வது எட்டிக்காயாக இருக்கும்போது பெண்களைச் சொல்லிப் பயன் என்ன? ஆண்களில் படித்தவர்கள் நூற்றுக்குப் பத்து பேர். அதிலும் படித்த பெண்கள் நூற்றுக்கு இரண்டு பேர்தான். அவர்களில் எத்தனை பேர் தைரியமாகத் தேகப் பயிற்சி செய்ய முன் வருவார்கள். சாதாரணமாய்ப் படித்த பெண்கள் தேகப் பயிற்சி என்று சொல்லுவதெல்லாம் பாட்மிட்டன், டேபிள் டென்னிஸ் முதலியவைகளைத்தான். இவைகளை ஏதோ ஹைஸ்கூல் படிக்கும் காலங்களிலோ, கலாசாலை படிக்கும் காலங்களிலோ ஆடியிருப்பார்கள். இல்லறம் புகுந்த பின் அந்த விளையாட்டுகளைக்கூட எட்டியும் பார்க்க மாட்டார்கள். அப்படியும் டேபிள் டென்னிஸ், பாட்மிட்டன் முதலியன சரியான தேகப் பயிற்சி ஆகாது.

நம்முடைய நாட்டுப் பெண்களுக்குக் குடும்பப் பொறுப்பு அதிகம். சமையல் வேலை முதற் கொண்டு, குழந்தைகளை வளர்த்தல் முதல் எல்லாக் காரியங்களையும் பெண்களேதான் செய்கிறார்கள். சில வீடுகளில் காலையில் பற்றவைத்த அடுப்பை இரவில்தான் அணைப்பார்கள். காலை, மத்தியானம், மாலை, இரவு நான்கு வேளைகளிலும் அடுப்படியில் போய்க் கஷ்டப்படுகிறார்கள். ஆனால் அவைகள்கூடத் தேகப் பயிற்சி ஆகாது. ஆனால் எல்லா வேலைகளும், பணியாட்கள் செய்ய, உடல், உடை நலுங்காமல் டாக்டர்களின் மேலான யோசனைப்படி வாழும் சகோதரிகளை விட இவர்கள் எத்தனையோ மடங்கு மேலானவர்கள். அவ்வளவுதான்.

முன்பெல்லாம் பெண்களுக்குச் சமைப்பதிலும் நல்ல தேகப் பயிற்சி இருந்தது. இந்தக் காலத்தில் பாதி வேலைகளை இயந்திரங்கள் செய்து விடுகின்றன. கிணற்றிலிருந்து ஜலம் இழுக்கும் வேலை கிடையாது. வாசலில், அதுவும் சமையல் அறையிலேயே ஜலம் வந்து விடுகிறது. சீயக்காய், மிளகாய், அரிசி மாவு, கோதுமை மாவு முதலியனவும் இயந்திரத்தில் அரைத்து வைத்துக் கொள்ளுகிறார்கள். இம்மாதிரி சற்றுக் கஷ்டப்பட்டு அரைக்கும் வேலை, குத்தும் வேலை, இடிக்கும் வேலைகளை எல்லாம் இயந்திரம் செய்து விடுவதால், உழைப்புச் சக்தி குறைந்துவிட்டது. இன்னும் இட்டிலி, தோசை மாவு அரைக்கும் இயந்திரம்தான் வீடுகளுக்கு வரவில்லை. பெரிய ஓட்டல்களில் மட்டும் வந்திருக்கின்றன. மாவுமில்லைப் போல அதையும் தெருவுக்கு ஒன்றாக வைத்து விட்டால் அந்த வேலைகூட இருக்காது.

சுமார் இருபது, முப்பது வருஷங்களுக்கு முன்பு கூடக் கையால் நெல்லைக் குத்திச் சாப்பிட்டுக் கொண்டிருந்தார்கள். பணக்காரர்கள் மட்டும் கூலியாட்களை வைத்துக் குத்துவார்கள். சாதாரண குடும்பஸ்தர்கள், அடுப்பில் உலையை வைத்து விட்டு, உலை கொதிப்பதற்கு முன் நெல்லை அரிசியாக்கி, உலையில் இடுவார்கள். அந்தக் காலத்தில் இவ்வளவு வியாதிகள் இருந்தது கிடையாது. இரண்டு வேளை தான் சமைப்பார்கள். காப்பி குடிக்கும் பழக்கம் கிடையாது. அப்படி காப்பி சாப்பிட வேண்டுமானால் வெல்லம், கருப்பட்டி, சுக்கு போட்டுத்தான் காப்பி போடுவார்கள். அது உடம்புக்கு நல்லது. தற்காலம் காப்பித்தூள் வந்தபின் பெண்களுக்கு அனுவசிய வேலைகள் அதிகமானதுடன் ஆரோக்கியமும் கெட்டு விட்டது.

பெண்களுக்குப் பிரசவம் அடிக்கடி உண்டாவதினால் இரத்தக் குறைவு, நரம்பு பலவீனம் முதலியவை உண்டாவது இயற்கை. அதைப் பிரசவித்த ஓரிரண்டு மாதங்களில் சரி செய்து கொள்ளலாம். ஆனால் காப்பி சாப்பிடுபவர்களுக்கு அவைகளை நிரந்தரமாக்கி விடுகிறது. அத்துடன்

இன்னும் அனேக வியாதிகள் வருவதற்கும் காப்பிதான் காரணம். காப்பி நம் பெண்மணிகளிடையே பழக்கமானதிலிருந்து. பெண்களுக்கு நோய்ச் சனியன் பிடித்து விட்டது. அதை நாளுக்கு நாள் குறைத்துக் கொண்டு அவர்கள் தொடர்ந்து ஆசனம் போடப் பழகுவார்களானால் பெண் குலம் மேன்மை அடையும். ஆரோக்கிய தேஜஸ் உண்டாகும். நற்சந்ததிகள் பெருகும். நோயில்லாப் பெருவாழ்வு வாழலாம்.

என்னதான் நாள் முழுவதும் வீட்டு வேலைகளைச் செய்தாலும் அது பூரண சரீர உழைப்பு ஆகாது. ஆரோக்கியமாய் இருக்கச் சில அபூர்வ கோளங்கள் சரீரத்தில் இருக்கின்றன. அதற்குக் கட்டாயம் பயிற்சி இருக்கவேண்டும். அவை தைராய்ட், பிட்யூடரி, பாரா தைராய்ட் முதலிய கோளங்கள். இந்தக் கோளங்கள் ஆண்களைவிடப் பெண்களுக்கு மிக அபூர்வமாகச் சில சமயம் மிக அதிகமாய் வேலை செய்கின்றன.

மேற்கூறிய கோளங்களின் உதவி சுகப் பிரசவத்துக்கு மிகவும் அவசியம். இவைகளைப் பற்றிப் பிறகு நன்றாய் விவரிக்கப்படும். இவைகளுக்குப் பயிற்சி கொடுக்க யோகாசனங்கள் தவிர வேறெதிலும் கிட்டாது. மாதர்களுக்கு உண்டாகும் எல்லாப் பிணியும் விலகும். வீட்டு விலக்கு ஒரு தொந்தரவும் இல்லாமல் உண்டாகும். மலடு போகும். மயக்கம், வலிகள், ஹிஸ்டீரியா முதலிய வியாதிகள் நீங்கும். ஆகவே பெண்களுக்கு ஆசனங்கள் ஒரு வரப்பிரசாதமாகும்.

ஆசனங்களையெல்லாம், எல்லா வயது வந்த பெண்மணிகளும் செய்யலாம். அறுபது வயதானவர்களும் செய்து, தங்களுக்கு இருக்கும் பிணியை நீக்கிக் கொண்டிருக்கிறார்கள். அத்துடன் மேலும் பிணி வராமல் தங்கள் சரீரத்தைப் பாதுகாத்துக் கொள்ளலாம்.

கர்ப்பமான ஸ்திரீகள் புதிதாக ஆசனம் பழகக் கூடாது. பிரசவமான மூன்று நான்கு மாதங்கள் கழித்து ஆரம்பிக்கலாம். வழக்கமாய் ஆசனம் செய்து வரும் சகோதரிகள் கர்ப்பம் கொண்டால், சில ஆசனங்களைச் சில மாதங்கள் வரைதான் செய்யலாம். அவைகளை அந்தந்த ஆசனங்களைப் பற்றி எழுதும் போது விவரிக்கப்படும்.

சுதந்திரமடைந்த நம் நாடு இனி பல வழிகளில் எவ்வளவோ முன்னேற வேண்டியிருக்கிறது. பெண்களுக்கு எல்லாக் காரியங்களிலும் சம உரிமைகள் வழங்கும் காலம் வந்துவிட்டது.



“தாதரென்ற நிலைமை மாறி ஆண்களோடு பெண்களும் சரிநிகர் சமானமாக வாழ்வோம் இந்த நாட்டிலே” என்ற பாரதியாரின் கனவு, நினைவாக வேண்டும். அதை நினைவில் வைத்துக் கொண்டு, வீணர்களின் பரிகாசப் பேச்சுக்கும், கேலிக்கும் செவி சாய்க்காமல், உறுதியான மனதுடன் பெண்கள் யோகாசனங்களைச் செய்ய முன் வர வேண்டும்.

‘இதென்னடி இது யோகமாம், ஆசனமாம். சாமியார்களும், சந்நியாசிகளும் செய்ய வேண்டியதைப் பெண்கள் செய்யலாவது. சரி இவர்களும் தலைகீழாக நின்றால் குடும்பம் உருப்பட்டாற் போல் தான்’ என்ற அஞ்ஞான வாதங்களைக் காதில் போட்டுக் கொள்ளாதீர்கள்.

நாம் வேண்டாமென்று ஒதுக்கின ஆசனங்களை இப்பொழுது மேல் நாட்டார் செய்கிறார்கள். அதனால் பலனும் அடைகிறார்கள். ஆரோக்கியமடைகிறார்கள். நாம் அவர்களிடம் இம்மாதிரி நல்ல குணத்தைக் கற்றுக் கொள்ளா விட்டாலும் லிப்ஸ்டிக், நகச்சாயம், பவுடர் பூச்சு முதலிய அனாவசிய மேல் அலங்காரங்களைக் கற்றுக் கொண்டோம். உள் அவயவங்கள் ஆரோக்கியமாக இருந்தால் இவைகளெல்லாம் எதற்கு? ஆரோக்கிய தேஜஸ், அழகு முகத்தில் ஜொலிக்கும்.

சில பெண்மணிகளுக்கு ஏற்கெனவே வயிற்றில் ஏதாவது இதற்கு முன் ஆப்ரேஷன்கள் நடந்திருந்தால், அப்பேர்ப்பட்டவர்கள், யோகாசன நிபுணர்களிடம் ஆலோசனை கேட்டு ஆசனங்களைப் பழக வேண்டும். அவர்களால் எல்லா ஆசனங்களும் செய்ய முடியா விட்டாலும், சிலவற்றைச் செய்யலாம். நிபுணர்களிடம் கலந்து ஆலோசித்தால் ஆப்பரேஷன் செய்தவிதம், இடங்களை அனுசரித்து சரியான ஆலோசனை சொல்லுவார்கள். ஆகையால், ஆப்பரேஷன் ஆகி இருக்கிறதே நாம் எப்படி ஆசனம் செய்வது என்று ஏங்க வேண்டியதில்லை. அவர்கள் செய்யக் கூடிய சுலபமான ஆசனங்களும் நிறைய இருக்கின்றன.

(தொடரும்)

# முல்லைச் சிரிப்பு

மூர்த்தி

ஆற்று மணலிலே அவளுடன் நான் விளையாடினேன்; காற்றடித்து மண் அவள் கண்களில் விழுந்த போது என் கைகளால் அவள் கண்களைத் துடைத்தேன். அப்பொழுது நாங்கள் கள்ளங் தெரியாத சின்னஞ்சிறிய பிள்ளைகள். எனக்கு வயது எட்டு, அவளுக்கு வயது ஆறு. கோடி வீட்டில் இருந்த குமரேசப் பிள்ளையின் மகள் தான் என் மோகனா. எப்படியோ எங்களுக்குள் பிரிக்க முடியாத பாசம் ஏற்பட்டு வளர்ந்தது. அதைக் காதல் என்றோ அன்பு என்றோ எப்படிச் சொல்வது என்றுதான் தெரியவில்லை நாங்கள் எங்கள் கிராமப் பள்ளிக்கூடத்திலே ஒன்றாகப் படித்தோம். எங்கள் இருவரிடையே தோன்றியிருந்த இந்த அதிசயமான ஒற்றுமையைக் கண்டு அந்த ஊரே அதிசயித்தது. இரண்டு மூன்று நாட்கள் நான் என் தகப்பனருடன் பக்கத்து ஊருக்குச் சென்று அங்கேயே தங்கவும் நேர்ந்தது. அந்த இரண்டு நாட்களும் அவள் என் வீட்டுக்கு என்னைத் தேடிக் கொண்டு இருநூறு தடவை வந்து விட்டாளாம். போகட்டும் அவள்தான் அப்படி ஒரு பைத்தியக்காரி என்றால் நான் அதைவிட மோசம். தூக்கத்தில் கூட "மோகனா, மோகனா" என்று அடிக்கடி பிதற்றுவேனாம்.

இதெல்லாம் அந்தக் காலம். தோட்டத்தில் புதைத்திருந்த ஓட்டு மாங்கொட்டை வளர்ந்து, இப்போது வாளிப்பான ஒரு செடியாகி விட்டது. பச்சைப் பசேலென்ற அதன் இலைகள் காற்றிலே அசைந்து ஆடிற்று. ஆம்! காலத்தின் வேகமான சக்கரம் ஒன்பது தடவை துரிதமாகச் சுழன்று விட்டது! அதாவது ஒன்பது ஆண்டுகள் ஓடி மறைந்தன.. இப்போது எனக்கு வயது பதினேழு அவளுக்கு வயது பதினைந்து. வறுமையின் தடையுத்தரவையும் மீறி என் உடலுக்கு இயற்கை தன் வரப்பிரசாதமான பருவத்திற்கேற்ற பாங்கான உடலைத் தந்திருந்தது. ஏன்? மோகனா கூட இப்போது அடியோடு மாறி விட்டாள். "மணி! மணி!" என்று என்னைச் சுற்றிச் சுற்றி வரும் சிறுமி மோகனாவா அவள்? பருவத்தின் புத்தமைப்பில் வளர்ந்த ஒரு மங்கையல்லவா? என்னைக் கண்டால் ஒரு புன்சிரிப்புத்தான் புரிவாள். அதோடு சரி! என்னுடன் பேசுவதை அவள் அடியோடு நிறுத்திவிட்டாள்.

ஆற்றோரத்தில் ஓங்கி வளர்ந்திருந்தது ஒரு நாகமரம். பழக் காலத்தில் நானும் மோகனாவும் முன்பெல்லாம் அங்கே வருவது வழக்கம். நான் மரத்தின் மீது ஏறிப் பழங்கள் பறித்து அவளுக்குத் தருவேன். அதே மரத்தடியில் இன்று நான் மட்டும் அவளை எதிர்பார்த்துக் காத்துக் கொண்டிருக்கிறேன். அவளும் வந்தாள். குடத்தில் தண்ணீர் மொண்டு கொண்டு கரையேறியதும் வழக்கமாக எனக்களிக்கும் அந்த மோகனப் புன்னகையைத் தான் அன்றும் எனக்களித்தாள். வாய்ப்பூட்டு திறக்கவே இல்லை! என் ஆத்திரம் ஆவல் இரண்டும் கரை புரண்டன. "மோகனா!" என்று என்னையும் அறியாமல் கூவி விட்டேன். நல்ல வேளை சுற்றுப் புறத்தில் யாருமில்லை. அவள் முகம் பயத்தால் வெளிறிப் போய் விட்டது. "மணி! நீ என்னுடன் பேசுவது ரொம்பக் கெடுதல்! யாராவது பார்த்தால் என்ன நினைப்பார்கள்? இன்னும் குழந்தையாக இருக்கிறாயே!" என்று கூறிவிட்டு அவள் விரைவாக நடந்தாள். நான் என் தவறை உணர்ந்தேன். அவள் போன திசையையே வெறித்துப் பார்த்த வண்ணம் எத்தனை நேரம் அங்கே நின்றுகொண்டிருந்தேனோ?

எனக்கு இந்தப் பாழாய்ப் போன பள்ளிக்கூடப் படிப்பு மூளையில் ஏறவே இல்லை. எத்தனை தடவை முற்றுகையிட்டும் அந்த மூன்றாவது 'பாரக்' கோட்டையைத் தாண்டவே முடியவில்லை. எனக்கும் அலுப்புத்தட்டி விடவே அத்துடன் என் படிப்புப் படலத்தை முடித்து விட்டேன். 'தரித்திரம் தாண்டவமாடும் ஒரு குடும்பத்தில் ஒரு தடியன் படிப்புமில்லாமல் வேலையும் இல்லாமல் எத்தனை நாளைக்குக் கையைக் கட்டிக் கொண்டு உட்கார்ந்திருக்க முடியும்? என் சிநேகிதன் ஒருவன் சென்னையில் மோட்டார் கம்பெனி ஒன்றில் வேலையாய் இருந்தான். அவன் உதவியினால் நான் மோட்டார் விடக் கற்றுக் கொண்டு ஒரு டாக்ஸி டிரைவராக அமர்ந்தேன். இந்த வேலை எனக்கு ரொம்பவும் பிடித்திருந்தது. புதுப் புது மனிதர்களை ஏற்றிக்கொண்டு பளபள வென்று மின்னும் என்னுடைய 'ஹட்ஸன்' காரை ஜன சமுத்திரத்தின் மத்தியிலே ஒரு படகைப் போலக் கிழித்துச் செல்லும் போது எனக்குக் கொஞ்சம் பெருமிதமும் கர்வமும் ஏற்படத்தான் செய்தது.

இடையிடையே என் மனத்திலே என் கிராமத்தைப் பற்றியும் மோகனாவைப் பற்றியும் ஞாபகம் வரும். ஆனால் புதிதாகக் கிடைத்திருக்கும் இந்தத் தொழிலின் மேல் எனக்கிருந்த பற்றுதலால் நான் கிராமத்திற்குப் போக வேண்டும் என்று நினைக்கவேயில்லை. மாதம் தவறாமல் என் பெற்றோர்களுக்குப் பணம் அனுப்பிக் கொண்டு இருந்தேன். எப்போதாவது ஒரு கடிதம் எழுதுவேன்.

இரண்டு மாதங்களுக்கு முன்பு ஒரு தடவை கிராமத்திற்குப் போயிருந்தேன். போனதும் போகாததுமாக மோகனாவின் வீட்டைச் சுற்றி இரண்டு மூன்று தடவை வட்ட மிட்டேன். ஆனால் மோகனா என் கண்களுக்குத் தென்படவே இல்லை. எனக்கு ஆச்சரியமாக இருந்தது. அப்பாவிடம் இதைப் பற்றிக் கேட்ட போது அவர் சிரித்தார். "நீ ஒரு பைத்தியக்காரன்தான்! இதில் சந்தேகமே இல்லை. ஏதாவது கதைப் புத்தகத்தில் கண்ட கண்ட கதைகளைப் படித்து விட்டு வாழ்க்கையிலும் அதே மாதிரி நடந்து விடும் என்று எதிர்பார்க்கிறாய். குழந்தையாக இருந்தபோது உன்னுடன் விளையாடினாள் என்ற குற்றத்திற்காக உன்னை அவள் காதலித்துத்தான் ஆக வேண்டும் என்று கட்டாயமா என்ன? கள்ளங் கபடில்லாத குழந்தைகளாய் நீங்கள் இருந்த போது நீ அவளைத் தொட்டு விளையாடியதை நினைத்து உருகிப் போகிறாயே, மடையா! அவளுக்குக் கல்யாணமாகி விட்டது. பட்டணத்தில் ஒரு பெரிய உத்தியோகஸ்தனுக்குக் கொடுத்திருக்கிறார்கள். இந்த விஷயங்களில் உன் போன்ற கற்பனைக்காரனுக்கு அவ்வளவு அனுபவம் போதாது" என்றார் என் தந்தை.

ஆம்! உண்மைதான்! இல்லாத கற்பனையை எல்லாம் வரவழைத்துக் கொண்டது நான்தான். அவள் என்னைக் காதலிப்பதாக என்னிடம் சொன்னாளா? இல்லை நான்தான் அவளிடம் என்றைக்காவது அப்படிச் சொல்லி இருப்பேனா? இரண்டும் இல்லை. அப்படி இருக்க அவள் எனக்குத்தான் உரியவள் என்று எப்படி நான் உரிமை கொண்டாட முடியும்? அவளுக்கு நான் எந்த விதத்தில் சமம்? செல்வத்திலும்—ஏன்? கல்வியிலும் கூட—நான் அவளை விட மட்டம். அவள் படிப்பில் வெகு புத்திசாலி, எனக்கப்புறம் பள்ளிக்கூடத்தில் சேர்ந்த அவள் நான் மூன்றாவது பாரத்தோடு படிப்புக்கு முற்றுப் புள்ளி வைத்த போது பத்தாவது வகுப்பை எட்டிப் பிடித்து விட்டாள். எந்த விதத்திலும் அவளை அடைய அருகதை இல்லாத நான் எப்படி அவளை எனக்கு உரியவள் என்று நினைக்கமுடியும்?

ஆனால் என்னைப் பார்த்த போதெல்லாம் அவள் ஏன் புன்னகை செய்ய வேண்டும் என்று என் மனம் எண்ணியது. சிறு வயதிலிருந்து பழகிய பாசம்தான் அதற்குக் காரணமே தவிர நீ நினைப்பதைப் போல் அவளுக்கு உன் மேல் உள்ள காதலால் அல்ல! என்று என் மனம் என்னைப் பார்த்துப் பரிகசித்தது.

அடுத்த நாள் என் கல்யாண சமாசாரத்தைப் பற்றி என் தகப்பனார் என்னிடம் பிரஸ்தாபித்தபோது ரொம்ப சந்தோஷமாக ஒப்புக் கொண்டேன். சில நாட்களுக்கெல்லாம் எனக்கும் கமலத்துக்கும் கல்யாணம் நடந்தது. கமலம் நல்ல அழகி. அவளை மணந்து கொண்டதில் எனக்குப் பூரண திருப்திதான். விவாகத்திற்குப் பிறகு நான் சென்னைக்குப் போய்ச் சேர்ந்தேன். மோகனாவும் சென்னையில் இருப்பதாக அப்பா சொன்னது நினைவுக்கு வந்தது. அவளை ஒரு முறை எப்படியாவது பார்க்க வேண்டும் என்ற எண்ணம் என் உள்ளத்தை அரித்துத் தின்றது. "மோகனா! காதல் என்ற பதத்திற்கு அர்த்தம் புரியாமல் நான் உன்னை என்னவோ நினைத்து விட்டேன், மன்னித்துக் கொள்" என்று ஒரு வார்த்தை அவளிடம் சொல்ல வேண்டுமென்று துடியாய்த் துடித்தேன். அந்த நினைப்பிலே என் மனைவி, சுற்றம் எல்லாவற்றையும் மறந்தேன். நடு ரஸ்தாவிலே வேகமாக மோட்டாரை விட்டுச் சென்ற நான் தூரத்தில் யாரோ ஒரு பெண்ணை மோகனா என்று நினைத்துச் சடேரென்று பிரேக்





போட்டதில் ஒரு விபத்து நேர்ந்ததோடு அபராதமும் கட்ட நேர்ந்தது. இந்த மாதிரி நான் பைத்தியக்காரத் தனமாக எத்தனையோ தடவை நடந்து கொண்டிருக்கிறேன்.

அடிக்கடி கமலா, "ஏன் என்னை இன்னும் நீங்கள் வரவழைத்துக் கொள்ளவில்லை? வீடு பார்த்தீர்களா? பதிலே போடாமல் இருக்கிறீர்களே?" என்றெல்லாம் எழுதுவாள். நான் அவைகளைக் கவனிப்பதே இல்லை. இடையில் ஒரே ஒரு தடவை கிராமத்திற்குப் போய் வந்தேன். அப்பொழுதும் ஒரே அவசரம் தான். பேசக் கூட நேரமில்லை. கமலா ஏதேதோ சொன்னாள். ஒன்று கூட என் மனதிற்குப் புரியவே இல்லை.

பிறகு ஒரு வருஷம் சென்றது. இன்னும் நான் சென்னையில் குடித்தனம் வைக்கவில்லை. எனக்கு ஒரு மகன் கூடப் பிறந்து விட்டான். ஆனால் இன்னும் நான் மோகனாவைத் தேடிக் கொண்டிருந்தேன்.

என் ஆசை ஒரு நாள் நிறைவேறிற்று. அன்று சென்னையில் ஒரு சினிமாத் தியேட்டருக்கு எதிரில் என் டாக்ஸியை நிறுத்தி விட்டுக் கிராக்கியை எதிர்பார்த்துக் கொண்டிருந்தேன். பகல் காட்சி முடிந்து ஜனங்கள் தியேட்டரை விட்டு வெளியே வந்து கொண்டிருந்தார்கள். தூரத்தில் வந்து கொண்டிருந்த இரண்டு தம்பதிகளைப் பார்த்ததும் என் உள்ளம் படபடத்தது. ஆம்! அவள் என் மோகனா தான்! அவள் என் டாக்ஸியையே நோக்கி வந்ததும் எனக்கு உடம்பு புல்லரித்தது. மோகனாவை அடையாளமே தெரியவில்லை. எத்தனை நகைகள்! சில்க் புடவை! அடடா! அவளுடன் வந்தவன் அவள் கணவனாகத்தான் இருக்க வேண்டும்! அவன் அவளிடம் ஏதோ சொல்லி விட்டு எங்கேயோ சென்றான்.

நேராக மோகனா என் வண்டிக்கு வந்து கதவைத் திறந்து என் வண்டிக்குள் உட்கார்ந்தாள். எனக்கு இருந்த அத்தனை தைரியத்தையும் வரவழைத்துக் கொண்டு "அம்மா! என்னைத் தெரிகிறதா உங்களுக்கு?" என்று கேட்டேன். "தெரியவில்லை! தெரிய வேண்டிய அவசியமும் இல்லை! பொதுவாக நீ ஒரு டாக்ஸிக்காரன்!" என்று கணீரென்ற பதில் அவளிடமிருந்து வந்தது. இருந்தாலும் நான் தைரியத்தைக் கைவிடாமல், "பொன்னேரியில் என்னை நீங்கள் பார்த்திருக்க வேண்டும். என் பெயர் மணி! மோகனா! என்னைத் தெரியவில்லையா?" என்ற வார்த்தை என்னையும் அறியாமல் வெளி வந்து விட்டது.

"ஷட் அப்! மணியாவது! இனியாவது! எனக்கு எவனையும் தெரியாது! என் பெயரைச் சொல்லி அழைக்க எவ்வளவு தைரியமடா உனக்கு! கர்வம் பிடித்தவனாய் இருக்கிறாயே! அதிகப் பிரசங்கி!" என்று கூறிச் சட்டென்று அவள் கதவைத் திறந்து கொண்டு வேறு வண்டியில் போய் ஏறி விட்டாள். அடுத்த நிமிஷம் என் குழம்பியிருந்த மூளை தெளிந்தது. என் உள்ளத்திலே நின்று என்னைச் சித்திரவதை செய்து கொண்டிருந்த மோகனாவின் உருவம் மறைந்தது. தவழ்ந்து விளையாடிக் கொண்டு இருந்த என் குழந்தை கண்ணனின் உருண்டை முகம் தெரிந்தது. என்னையே நம்பி உருகிக் கொண்டிருக்கும் என் கமலாவுடைய ஆவல் ததும்பும் முகத்தையும் என் மனக் கண்ணிலே நான் பார்த்தேன். இவ்விதம் நான் என் சரியான புத்தியை அடைந்து விட்டபொழுது மோகனா ஏறியிருந்த டாக்ஸி புறப்பட்டது. என் வண்டியிலும் ஒரு பிரமுகர் ஏறினார். முதலில் என் வண்டியில் ஏறிய சவாரியை இழந்து விட்ட என்னைப் பார்த்து கர்வமாகப் புன்னகை செய்தான் அந்த டாக்ஸிக்காரன். அதைப் பின் தொடர்ந்து என் 'ஹட்ஸன்' அந்தப் பிரமுகரை ஏற்றிக் கொண்டு சென்றது.

சற்று நேரத்துக்கெல்லாம் அந்த வண்டியை நான் முந்தி விட்டபோது என் முகத்திலே தோன்றிய அலட்சியம், பெருமிதம், கர்வம் இவைகளையெல்லாம் மோகனா கவனித்து விட்டாள் என்றே நினைக்கிறேன். இல்லா விட்டால் அவள்

ஒரு முறை என்னைப் பார்த்துவிட்டுத் தலை குனிவானேன்! ஆம். அவன் மனச்சாட்சி அவனுக்கு அறிவுறுத்து மல்லவா? ஆனால் நான் அவனைக் கவனியாதவன் போல் காரை ஓட்டிக்கொண்டு போய் விட்டேன்.

மறுநாள் தந்தியடித்து என் குழந்தையையும் கமலாவையும் வரவழைத்துக் கொண்டேன். முன்பெல்லாம் அந்தக் கர்வக்காரி மோகனாவின் நினைவிலே இந்த உலக நினைவே இல்லாமல் இருந்தது எனக்கு. ஆனால் இப்போது தட்டுத் தடுமாறி நடக்கும் என் குழந்தை கண்ணனின் முல்லைச் சிரிப்பிலே காமினியைப் பற்றிய கவலை எனக்குக் கிடையாது! ஆனால் அன்று கடைத்தெருவுக்குப் போய்விட்டு நான் வீட்டுக்குத் திரும்பி வந்தபோது உள்ளே பேச்சுக் குரல் கேட்டுச் சற்று நின்றேன். குரல் மோகனாவின் குரல் என்பதை அறிந்ததும் எனக்கு ஆச்சரியமாக இருந்தது. உற்றுக் கேட்டேன்.

"எப்படியாவது இருக்கட்டும், கமலா! நீயும் உன் கணவனும் ஒற்றுமையாய்ச் சௌகரியமாய் இருந்தால் சரி! நீ, உன் கணவன் உன்னிடம் பராமுகமாய் இருப்பதை எனக்கு எழுதினபோது எனக்கு அவனுடைய உள்ளம் தெரிந்து விட்டது. அவனிடம் நான் என் சொந்தத் தமையனுக்கு மேலாக அன்பு கொண்டவள். ஏதோ கொஞ்சம் அறிவுள்ள எனக்கு அவர உள்ளத்தின் நிலையை ஊகித்துக் கொள்ள வெகு நேரம் பிடிக்கவில்லை. ஆகவே அன்று அவன் என்னிடம் பேசினதும் ரொம்பவும் கர்வமாகப் பேசி அவன் என்னை வெறுக்கும்படி செய்து கொண்டேன். அது கிடக்கட்டும். குழந்தைக்கு என்ன பெயர் வைத்திருக்கிறாய்?"

"கண்ணன் என்று வைத்திருக்கிறோம்" என்றாள் என் மனைவி.

கண்ணன் தன் சிறிய கைகளைக் கொட்டிக் கொண்டு கல கல வென்று சிரித்தான். அவன் முல்லைச் சிரிப்பிலே மயங்கி மோகனாவும் கன்னங்குழிய நகைத்தாள். பிறகு கமலாவும் அவர்களுடன் சேர்ந்து கொண்டாள். வெளியிலிருந்தபடியே அவர்களுடைய ஆனந்தத்தில் நானும் பங்கெடுத்துக் கொண்டேன். என் கண்ணனின் கள்ளங்கபடமற்ற முல்லைச் சிரிப்புக்கும் மோகனாவின் மோகனப் புன்னகைக்கும் அதிக வித்தியாசம் எனக்குத் தோன்றவில்லை! கண்ணன் கபடமறியாத குழந்தை! மோகனாவும் அதைப் போலவே அருமையாக நேசிக்கப்பட வேண்டிய ஒரு மோகினி.

# தங்கையும் தமக்கையும்

எஸ். வி. எஸ்.

பார்க்கப் போனால் மிக மிகச் சாமான்ய விஷயம்தான். ஆனால் அது அவனுக்கு எவ்வளவு வேதனையை அளித்தது! எவ்வளவு ஆத்திரமூட்டியது! அவர்களுடைய இன்பமயமான இல்லற வாழ்க்கைக்குத் தூமகேது போல் அல்லவா அது ஆகிவிட்டது!

ஒன்றுமில்லை, கல்யாணராமனுடைய மனைவி காந்தி. தன் தங்கை சியாமளாவின் பட்டுப் புடவையை எடுத்து உடுத்திக் கொண்டிருந்தாள். இதுதான் அவனுடைய மனக் கலக்கத்துக்கும் கோபத்துக்கும் காரணம்.

அக்கா தங்கை என்றிருந்தால் இவ்விதம் நகை நட்டு, துணி மணிகளைப் பரிவர்த்தனை பண்ணிக் கொள்வது இயல்புதான். இதில் ஒரு புருஷன் இப்படி ஆத்திரமடையலாமா என்று கூடத் தோன்றலாம். கூடாதுதான். ஆனால் இதைப் பற்றிக் கல்யாணராமனைக் கேட்டால் தான் ஆத்திரமடைந்தது எவ்வளவோ நியாயம் என்று சொல்வான்.

* * *

கல்யாணராமன் காந்தியைக் கல்யாணம் பண்ணிக் கொண்ட புதிதில் அவனுக்கு மிகவும் அச்சமாகத்தான் இருந்தது. காந்தியைக் கண்டல்ல; காந்தியைக் கண்டு அச்சப்படுவதற்கு அவள் என்ன பேயா, பிசாசா! பாவம், அவள் ரொம்ப நல்ல பெண் ஆயிற்றே!

அவன் அச்சப்பட்டதெல்லாம், கல்யாணத்தினால் ஏற்படும் பொறுப்புகள், பந்தங்கள் இவற்றைக் கண்டுதான். இந்தப் பொறுப்புக்களை ஏற்க, தனக்குப் போதியவருவாயும் மனத்துணிவும் உண்டா என்று பயப்பட்டான். காந்தியின் சுபாவம் எப்படியிருக்குமோ, மாசம் 'பத்துச் சோப்புக் கட்டி வாங்கித்தா, இருபது ஹேர் ஆயில் பாட்டில் வாங்கிக் கொடு, இரண்டு பெங்கால் ஸில்க் புடவை வேண்டும்' என்றெல்லாம் நச்சரிப்பாளோ! தன் மன அமைதியைக் குலைத்து விடுவாளோ! என்றெல்லாம் நினைத்தான்.

இப்படி அவன் மனசு பலவிதங்களில் குழப்பமடைந்திருந்தபோது தமிழ்நாட்டுப் பெரியார் ஒருவர் எழுதியிருந்த புஸ்தகம் ஒன்றில் ''வாலிபனே, உன்னை நம்பி, ஒரு பெண், தன் தாய் தந்தை, தங்கை, தமக்கை, மற்ற நெருங்கிய தோழிகள், உற்றார் உறவினர் யாவரையும் தியாகம் செய்து விட்டு வருகிறாள். அவளுடைய தியாகத்தை உணர். அவளுடைய நிலைமையைக் கண்டு அனுதாபப்படு'' என்ற பொருள் கொண்ட சில வாக்கியங்கள் இருந்தன. அதைப் படித்தான். அவன் மெய்சிலிர்த்தது. அந்த வாக்கியங்களில் உள்ள உண்மை, அவன் உள்ளத்தில் உறைத்தது. உள்ளத்தையே ஆட்கொண்டது.

அன்றைய தினத்திலிருந்து காந்தியின் பால் அன்பும் இரக்கமும் ஏற்பட்டது. கல்யாணமான ஆறுமாதம் குடும்பம் சென்னையில் ஆரம்பமாயிற்று. இல்லற வாழ்க்கை பரஸ்பர அன்பில், இன்பம் விளையும் பூமியாக இருந்தது. அன்பென்னும் உரம் நாளுக்குநாள் அதிகமாகி வந்தது. அதனால் அவர்கள் இல்லற வாழ்க்கையென்னும் வயலில் இன்பம் செழித்தே வளர்ந்தது.

ஒரு நாள் கல்யாணராமன் இரண்டணா கொடுத்து ஒரு தாழம்பூ மடல் வாங்கிக் கொண்டு வந்து காந்தியிடம் கொடுத்தான். அதைக் கண்ட போது காந்தியின் முகம் மகிழ்ச்சியால் எவ்வளவு காந்தி பெற்றது! காந்தி இரண்டணா தாழம்பூ மடலுக்கு இவ்வளவு சந்தோஷப்படுவாள் என்று அவன் சற்றும் எதிர் பார்க்கவே இல்லை.

ஒரு நாள் கல்யாணராமன் ஆபீஸிலிருந்து வந்ததும் வராததுமாக ''காந்தி, இன்றைக்கு மத்தியானம் டிபனுக்கு மோர்க் கூழ் பண்ணிக் கொடுத்திருந்தாயே, அது என்ன ருசியாயிருந்தது, தெரியுமா? ஆபீஸிலிருந்தவர்கள் அத்தனை பேரும் எனக்கு உனக்கு என்று போட்டி போட்டுக் கொண்டு வந்து விட்டார்கள். கடைசியில் எனக்கு ஒரு நெல்லிக்காய் அளவு கூட மிஞ்சவில்லை'' என்று பெருமையாகச் சொன்னான்.

இதைக் கேட்டு, காந்தி அடைந்த சந்தோஷம் கொஞ்சநஞ்சமில்லை. 'போதுமே, மோர்க் கூழ் ஒரு பெரிய பட்சணம். அதை வாயார வாழ்த்திவிட்டார்களாக்கும்! ஏன், என்னை இப்படிக் கேலி பண்ணுகிறீர்கள்' என்று வெட்கமும் புன்னகையும் தவழத் தன்னடக்கமாக பதில் சொன்னாள். ஆனால் அவள் உள்ளத்தில் ஆனந்தக் கடல் அல்லவோ கும்மாளி போட்டுக் கொண்டிருந்தது!

பாரதியார் சொன்னார்: 'எத்தனை கோடி இன்பம் வைத்தாய், இறைவா! இறைவா!' என்று. அதைக் காந்தியும் கல்யாணராமனும் பரிபூரணமாக உணர்ந்தார்கள். விலைவாசிகள் ஏறுக்கு மாறாக ஏறியிருக்கும் இக் காலத்தில், நூற்றிருபது ரூபாய் சம்பளக்காரன் இவ்வளவு இன்பமாக வாழ்க்கை நடத்துகிறான் என்றால் அது அதிசயப்பட வேண்டிய விஷயமல்லவா!

ஆனால் ரொம்பவும் அதிசயப்பட முடியாதபடி அவர்கள் வாழ்க்கையிலும் சிறிது மனஸ்தாபங்கள் வளரத் தொடங்கின.

* * *

காந்திக்கும் கல்யாணராமனுக்கும் கல்யாணமான இரண்டு வருஷங்கள் கழித்துக் காந்தியின் தங்கைக்குக் கல்யாணமாயிற்று.

காந்தியின் தங்கை சியாமளா வாழ்க்கைப் பட்ட இடம் மிகவும் பணக்கார இடம். சியாமளாவின் கணவன் வேணுகோபாலன் பெரிய வியாபாரி. அவன் சியாமளாவுக்கு வைர நகைகளாகச் செய்து போட்டிருந்தான்.

அவளுக்கென்று ஒரு பங்களா, கார், மற்ற வசதிகள் எல்லாம் செய்து கொடுத்திருந்தான்.

இதை யெல்லாம் கேட்க கேட்க, காந்தி, தன்னை சியாமளாவுடன் ஒப்பிட்டுப் பார்த்துக் கொண்டாள். அவளுக்குத் துக்கம் தொண்டையை அடைத்தது. தான் எவ்வளவு பரம ஏழையைக் கல்யாணம் பண்ணிக்கொண்டாள்; தரித்திரனைக் கல்யாணம் பண்ணிக் கொண்டதோடல்லாமல், ரொம்பவும் சந்தோஷமாக இருப்பதாகவும், தனக்கு இணை யாருமில்லை என்று வேறு பெருமைப் பட்டுக் கொண்டிருந்தாளே, அன்புள்ள கணவன் கிடைத்து விட்டான் என்று எவ்வளவு பெருமைப் பட்டுக் கொண்டிருந்தாள். இப்போதல்லவா தெரிகிறது! கணவன் என்றிருந்தால் பெண்டாட்டி மேலே அன்போடு இருக்க மாட்டாளு, என்ன! இதைப் போய் பெரிய விஷயமாக நினைத்துக் கொண்டு இருப்பிப் பட்டுக் கொண்டாளே! ஒரு நகை உண்டா, ஒரு நல்ல புடவை உண்டா இந்த மனுஷ்யனைக் கல்யாணம் பண்ணிக் கொண்டதில்!...... இப்படி எண்ணி எண்ணி ஏங்கினாள் காந்தி.

இந்த எண்ணங்களின் பிரதிபலிப்பு, அவள் நடையிலிருந்தது, உடையிலிருந்தது, பேச்சிலிருந்தது; மூச்சிலும் இருந்தது!

ஆனால் கல்யாணராமனால் அவளுடைய மாறுதலுக்குச் சரியான காரணம் புரிந்து கொள்ள முடியவில்லை. 'காந்தி முன்னைப்போல் ஏன் அவ்வளவு உற்சாகமாக இருப்பதில்லை! என்ன காரணம்!' என்று தன் மனதுக்குள் நினைத்துக் கொள்வான். எப்படியும் வெகு சீக்கிரத்தில் அவள் மனது மாறி ஒரு நிலைக்கு வருவாள் என்று எதிர்பார்த்தான். ஆனால் அவன் எண்ணத்தில் ஓர் இடி அன்று விழுந்தது.

அன்று மாலை காரியாலயத்திலிருந்து வரும் போது, பத்து ரூபாயில் அழகான பார்டரில் ஒரு நூல் புடவை வாங்கி வந்தான். இதைக் கண்டு காந்தி எவ்வளவு சந்தோஷம் அடைவாள்; அவள் முகம் எப்படி மலரும் என்றெல்லாம் கற்பனை செய்து சந்தோஷப் பட்டுக் கொண்டே வந்தான். வீட்டுக்குள் நுழைந்து "காந்தி!" என்று கூப்பிட்டுப் பொட்டலத்தைக் கொடுத்தான். அதைப் பிரித்துப் பார்த்த காந்தி, "பிரமாதம், இதை வாங்கி வந்து விட்டுத்தான் இவ்வளவு குதூகலமோ! பட்டுப் புடவைதான் வாங்கி வந்து விட்டீர்களோ என்று பார்த்தேன். நேற்றுக் கல்யாணமானவள் எல்லாம் பட்டுப் புடவையிலும் வைர நகையிலும் மினுக்குகிறார்கள். எனக்குக் கல்யாணமாகி இரண்டு வருஷத்துக்கு மேலாகிறது. அரை கஜம் பட்டு ரவிக்கைத் துண்டைக் கூடக் காணும்! என்னமோ வேணுமே!" என்று சொல்லி, அவன் முகத்தில் விட்டெறியாத குறையாகக் கீழே எறிந்தாள். அந்தக் கணமே கல்யாணராமனின் மனம் உடைந்து விட்டது; அத்துடன் அவளுடைய தாபத்தின் காரணமும் அவனுக்குப் புலப்பட்டது.

'சியாமளா யார்! அவள் தங்கைதானே, அவள் பணக்கார இடத்தில் வாழ்க்கைப் பட்டிருக்கிறாள் என்று சந்தோஷப்படுவாளா! அதை விட்டுத் தன் நிலைமையையும் அவள் நிலைமையையும் ஒப்பிட்டுப் பார்த்துத் தன்னையும் கஷ்டப்படுத்திக் கொண்டு, எனக்கும் வேதனை அளிக்கிறளே! காந்தியின் சுபாவமே மாறிவிட்டதே!' என்று அன்றிரவெல்லாம் நினைத்து நினைத்து ஏங்கினான். வெகு நேரம் வரை அவனுக்குத் தூக்கமே வரவில்லை!

*　　*　　*

ஒரு வாரம் சென்றது. சென்ற ஒரு வாரமும் இயந்திரம் இயங்குவதுபோல்தான் காந்தியும் கல்யாணராமனும் பழகினார்கள்.

அன்று கல்யாணராமன் காரியாலயத்திலிருந்து வந்ததும் இந்த ஒரு வாரமாகக் காணாத மாறுதல் காந்தியிடம் ஏற்பட்டிருந்ததைக் கண்டான். அவனுக்கு ஆச்சரியமாகப் போய்விட்டது.

முதலில் புன்னகை தவழ வரவேற்றாள். இன்மொழிகள் கூறினாள். இன்னும் பல பல சைத்யோபசாரங்கள் செய்தாள். கல்யாணராமனுக்கு இவையெல்லாம் மகிழ்ச்சி யளித்தனவென்றாலும், இவற்றிற்கு அடிப்படையில் தொக்கி நிற்கும் காரியம் எப்படிப்பட்டதோ என்ற அச்சம் மட்டும் அவன் உள்ளத்தில் இருக்கத்தான் செய்தது.

"என்ன காந்தி, இன்றைக்கு ஏதாகிலும் விசேஷம் உண்டா!" என்று தானும் உற்சாகமாக இருக்கிறான் என்பதைக் காட்டிக் கொள்ளக் கேட்டான்.

"உண்டு!" என்று சொல்லி நிறுத்தினாள்.

"என்ன விசேஷம்! ஏது! ஒன்றும் சொல்ல மாட்டேன் என்கிறாயே!"

"சியாமளாதான் எழுதியிருக்கிறாள். அவள் இந்த வருஷம் டிசம்பருக்குச் சென்னைக்குப் போகப் போகிறாளாம். நீயும் அத்திம்பேரும் அவசியம் வந்து பத்துநாள் சென்னையிலிருக்கணும் என்று எழுதி யிருக்கிறாள். என்ன!



நாமும் சென்னைக்குப் போவமா!......" என்று கொஞ்சுதலாகக் கேட்டாள் சாந்தி.

கல்யாணராமனுக்கு என்ன பதில் சொல்வது என்று தெரியவில்லை. அவன் தன் கம்பெனி வேலைக்கு வந்து பத்து வருஷங்களுக்கு மேல் ஆகிறது. அவனுக்கு இதுவரை தலைவலி என்று ஒருநாள்கூட லீவ் எடுத்தது கிடையாது. பழக்கமில்லாத விஷயத்தில் ஈடுபட்டு எப்படி பத்து நாள் லீவ் வேண்டும் என்று கேட்பது! எனினும் சாந்தியின் கோரிக்கையை மறுத்து விட்டால் அவள் எவ்வளவு வருத்தப்படுவாள்! இதை நினைத்தவுடன் அவன் கோரிக்கைக்கு உடன்படுவதைத் தவிர வேறொன்றும் அவனுக்குத் தெரியவில்லை.

மறுநாள் காரியாலயத்துக்குப் போனதும், போகாததுமாகப் பத்துநாள் லீவ் வேண்டும் என்று எழுதி மானேஜருக்கு அனுப்பினான். மானேஜர் கல்யாணராமனைக் கூப்பிட்டு "அவசியம் உனக்கு லீவ் வேண்டியதுதானா!" என்று கேட்டார்.

"ஆமாம்" என்றான் கல்யாணராமன்.

"இல்லை, மற்றும் ஒரு முறை யோசித்துப் பார்......!" என்றார் மானேஜர்.

கல்யாணராமனுக்கு வருத்தமாகப் போய் விட்டது. "என்ன ஸார், இது! பத்து வருஷ சர்வீஸில் ஒரு நாள் கூட லீவ் எடுத்தது கிடையாது. இப்போது பத்து நாள் லீவ் கேட்டால் இப்படிக் கோபப் படுகிறீர்களே!" என்றான்.

"எனக்கு ஒன்றும் கோபமில்லை; பேஷாக எடுத்துக் கொள். ஒரு காரியத்தை உத்தேசித்துக் கேட்டேன். எதற்கும் இந்தப் பத்து நாள், எந்த ஊரிலிருக்கப் போகிறாயோ, அந்த ஊர் விலாசத்தை மட்டும் என்னிடம் கொடுத்து விட்டுப் போ!" என்றார்.

சாந்தி சென்னைப் பிரயாணத்துக்கு வேண்டிய ஏற்பாடுகளைப் பிரமாதமாகச் செய்யத் தொடங்கினாள்.

போகிற வீடு தங்கை வீடுதான். ஆனாலும் தங்கை பழைய தங்கையா! பணக்காரி யல்லவா! அவள் அந்தஸ்துக்குத் தகுந்தபடி தானும் ஓரளவாவது இருக்க வேண்டுமல்லவா! அதற்காக அண்டை அயல் வீடுகளிலிருந்து, தன் கைக்கு இரண்டு ஜதை தங்கக் காப்பும், கழுத்துக்கு இரண்டு வடம் தங்கச் சங்கிலியும் இரவல் வாங்கிக் கொண்டாள்.

இந்த விஷயம் கல்யாணராமனுக்குத் தெரியும். சற்று மனதுக்குக் கஷ்டமாக இருந்தது. இருந்தாலும்—'அதனால் என்ன! போய்விட்டுப் போகிறாள். அவள் பொறுப்பு, அவள் இஷ்டம்' என்று ஏதேதோ சொல்லித் தன்னைச் சமாதானம் செய்துகொண்டான்.

* * *

சென்னையில் விமலாபுரத்திலிருந்த சியாமளாவின் பங்களா வாசலில் ஒரு குதிரை வண்டி வந்து நின்றது.

குதிரை! ஆகா, குதிரை என்று அடையாளம் கூடச் சொல்ல முடியாத அளவுக்குத் தேய்ந்து, ஒட்டி உலர்ந்திருந்தது. அந்தக் குதிரை வண்டியிலிருந்து சாந்தியும், கல்யாணராமனும் இறங்கினார்கள். அன்றைய காலைப் பத்திரிகையைப் படித்துக் கொண்டிருந்த சியாமளா பத்திரிகையைத் தாழ்த்தி வாசலில் யார் வந்திருக்கிறார்கள் என்று பார்த்தாள். உடனே, "வா அக்கா! வாங்கோ அத்திம்பேரே!" என்று சொன்னவள் அத்துடன் நிறுத்தியிருக்கக் கூடாதோ. "அத்திம்பேரே, போயும் போயும் குதிரை வண்டியிலே வந்தீர்களே, டாக்ஸியில் வந்திருக்கப்படாதோ!" என்று சிரித்துக்கொண்டே சொன்னாள். அவள் மனசில் விகல்பமான எண்ணம் ஏதும் கிடையாது. டாக்ஸிக்கும் குதிரை வண்டிச் சத்தத்துக்கும் அதிக வித்தியாசம் கிடையாதே, டாக்ஸியில் வந்திருந்தால் சௌகரியமாகவும் சீக்கிரமாகவும் வந்திருக்கலாமே என்ற எண்ணத்தில்தான் சியாமளா சொன்னாள்.

ஆனால் அவள் வார்த்தைகளில் இவ்வளவு நல்லஅர்த்தம் மறைந்திருக்கிறது என்பதை அறியாத கல்யாணராமனுடைய உள்ளத்தில் முள் போல் சுருக்கென்று தைத்தன அவ் வார்த்தைகள். தன் ஏழ்மையைச் சியாமளா பரிகசிப்பதாக அவனுக்குப் பட்டது.

இவ்விதம் கலக்கமடைந்த கல்யாணராமன், சற்று நேரம் கழித்து "சியாமளா, இந்த பங்களாவுக்கு என்ன வாடகை தருகிறீர்கள்!" என்று கேட்டான்.

சியாமளா இடிஇடி என்று சிரித்து விட்டு, "வாடகை, கீடகை ஒன்றும் கிடையாது, அத்திம்பேரே! இது அவர் சொந்த பங்களா. வியாபார நிமித்தம் பட்டணத்துக்கு வரும் போது தான் தங்குவதற்கென்று அவர் இந்தப் பங்களாவை ஒன்றரை வருஷத்துக்கு முன்னால் நாற்பதினாயிரம் ரூபாய் கொடுத்து வாங்கினார்" என்றாள்.

கல்யாணராமனுக்குத் தன் மேலேயே இப்பொழுது கோபம் வந்தது. 'என்ன அசட்டுத்தனமான கேள்வி கேட்டோம்!' என்று நினைத்துக் கொண்டான். ஆனால் அதற்கு சியாமளா எவ்வளவு அகம்பாவமான பதில் கொடுத்தாள்! எல்லாம் பணம் செய்கிற கூத்து என்று வேறு நினைத்தான்.

"ஏன் சியாமளா, உங்க அகத்துக்காரர் எங்கே காணவில்லை!" என்று கேட்டான் அடுத்தபடியாக.

"டென்னிஸ் கோர்ட்டுக்குப் போயிருக்கிறார். 'என் ஷட்டகர் வந்தால் இருக்கச் சொல்லு; ஒரு 'கேம்' ஆடிவிட்டு வருகிறேன்' என்று சொல்லிவிட்டுப் போனார். வர நாழியுமாச்சு" என்றாள் சியாமளா.

'ஒரு நாள் டென்னிஸ் விளையாட்டு இல்லாவிட்டால் என்னவாம்! நான் வருகிறேன் என்பதற்காக விட்டிருக்கக் கூடாதோ! எல்லாம் பணம்! பணம் அப்படிச் செய்யச் சொல்கிறது!' என்று மனசில் நினைத்துக் கொண்டான். பாவம், கல்யாணராமன்!

சமையல்காரன் கல்யாணராமனுக்குக் காப்பி கொண்டு வந்து கொடுத்தான். அதைக் குடித்து விட்டுச் சற்று வெளியே போய் விட்டு வரலாம் என்று புறப்பட்டான்.

ஊரெல்லாம் சுற்றிப் பார்த்துவிட்டுக் கல்யாணராமன் மெள்ளப் பராக்குப் பார்த்துக் கொண்டே வந்து கொண்டிருந்தான். 'டமார்' என்று ஒரு கார் அவன் அருகில் வந்து நின்றது. அதற்குள் இருந்தது வேணுதான். அவன் கல்யாணராமனை ஏற்றிக்கொண்டான்.

கார் வேணுவின் பங்களாவுக்குள் நுழைந்ததும், உள்ளிருந்த இரு சகோதரிகளும் வெளியே வந்தார்கள்.

ஆ! யார் இது காந்தியா! அடையாளமே தெரியவில்லையே! பள, பள வென்று கண்ணைப் பறிக்கும் சரிகை போட்ட பட்டுப் புடவை. கழுத்தில் நாலுவடம் சங்கிலி, கைகளில் தங்க வளையல்கள். காந்தி, கல்யாண ராமனின் காந்தியா இவள்! நூற்றிருபது ரூபாய் சம்பளக்காரனின் மனைவியா இவள்! — இப்படிப் பிரமித்த வண்ணம் அவளையே வைத்த விழி வாங்காமல் கல்யாணராமன் பார்த்துக் கொண்டிருந்தான்.

"காந்தியா! சியாமளாவுக்கும் காந்திக்கும் அடையாளமே தெரியவில்லையே!" என்றான் வேணுகோபாலன். அம்மொழிகள் காதில் விழுந்ததும், கல்யாணராமனின் பிரமை நீங்கியது. வேணுவின் மொழிகள் காதில் நாராசம் போல் பாய்ந்தன. உள்ளத்தில் இனம் தெரியாத வேதனை யுண்டாயிற்று.

ஆம், நாம் பட்டுப் புடவை வாங்கித்தரவில்லை; நகை வாங்கித்தர வில்லை என்பதை வேணுகோபாலன் எதிரில் இப்படியா என்னை இடித்துக் காட்டுவது' நானே, வேணுகோபாலன் சட்டைகளையும் கோட்டுகளையும் போட்டுக் கொண்டால் காந்திக்குப் பிடிக்குமா! சொந்தத் தங்கையின் துணியும் நகையும்தானே, போட்டுக் கொண்டால் என்ன என்றாலும், கட்டிக் கொண்ட புருஷனின் மனம் எப்படி ஏற்கும்! தங்கையின் புருஷன் எதிர்ல் தன் புருஷனின் உடல், எண் சாண் உடல், ஒரு சாணாகக் குறுகுமே என்று எண்ணிப் பார்க்க வேண்டாமா!

சென்னைக்கு வந்து இரண்டு மணி நேரம் ஆகவில்லை. அதற்குள் இவ்வளவு மனத்தை வருத்தும் சம்பவங்கள் நிகழ்ந்து விட்டன! இன்னும் என்ன என்ன அவமானங்கள் எல்லாம் நேர இருக்கின்றனவோ என்று எண்ணி எண்ணிப் புழுங்கினான் கல்யாணராமன். முகத்தில் சோர்வு தட்டி விட்டது.

இதைப் பார்த்தாள் காந்தி. கல்யாணராமன் தனியாக இருக்கும் சமயம் பார்த்துக் காந்தி, "ஏன் ஒரு மாதிரியாக இருக்கிறீர்கள்!" என்று கேட்டாள்.

"நீ ஊரிலிருந்து கொண்டு வந்த புடவைகள் ஒன்றுமில்லையா! சியாமளாவின் புடவையைத் தான் கட்டிக் கொள்ள வேண்டுமா!" என்று கேட்டான் கல்யாணராமன்.

காந்தியின் கண்களில் கண்ணீர் மல்கிவிட்டது. "சியாமளா, முப்பது நாற்பது புடவை அடுக்கி வைத்திருக்கிறாள். 'கட்டிக் கொள்ளாமல் பெட்டியில் வைத்தே, புழு அரித்துப் பாழாய்ப் போகிறதே! நீ தான் கட்டிக் கொள்ளேன், அக்கா!' என்று சொல்லிக் கொடுத்தாள். நான் அதை உடுத்திக் கொண்டேன். இதற்கு இவ்வளவு மனத்தாங்கல் உங்களுக்கு...... நான் தப்பித்தவறிக்கூட நல்ல புடவை கட்டிக் கொள்ளக் கூடாது. பஞ்சை, பரதேசிக் கோலத்திலேயே நான் இருக்க வேண்டும் என்பது உங்கள் ஆசை..." என்று சொல்லி மள மளவென்று கண்ணீர் வடித்து விட்டுப் போய் விட்டாள் காந்தி.



"டாக்டர் ஸார், உங்களிடம் எந்த நோயாளி வந்தாலும் அவரை 'என்ன சாப்பாடு சாப்பிடுகிறீர்கள்?' என்று கேட்கிறீர்களே! அவர் சாப்பிடுவது என்ன என்று தெரிந்தால் வியாதியைச் சொல்லிவிட முடியுமா?"

"இல்லை, இல்லை! என்ன 'பில்' போடலாம் என்பதற்காகக் கேட்டுக் கொண்டிருக்கிறேன்!"

'பாழாய்ப் போகிறதைக் கொடுத்தாளாம்: இவளும் கட்டிக் கொண்டாளாம், பிச்சைக்காரியைப் போல. கொஞ்சமாவது வெட்கம், மானம் இருந்தால் தானே! இப்படிப் பட்டுப் புடவைப் பைத்தியம், நகைப் பைத்தியம் வேண்டாம்தான்! சரி. இனி என்ன செய்யலாம்! இனி காந்தி, கல்யாணராமன் காந்தியல்ல. கல்யாணராமன் உணர்ச்சிகளுக்கு மதிப்புக் கொடுக்கும் காந்தி யல்ல...' என்று பல பல எண்ணி மனம் புழுங்கினான்.

ஜிகு ஜிகு, ஜிகு ஜிகு என்று சத்தமிட்டுக் கொண்டு திருவனந்தபுரம் எக்ஸ்பிரஸ் ஓடிக் கொண்டிருந்தது. அதனுள் உட்கார்ந்திருந்த கல்யாணராமன் எண்ணங்களும், மூலைக்கு மூலை ஓடின. ஒரு நிலை கொள்ளவில்லை.

காலை எட்டு மணி ஆயிற்று; வண்டி மதுரை ஸ்டேஷனை அடைந்தது. அதைவிட்டு யந்திரம் போல் கல்யாணராமன் இறங்கினான். தன்னந் தனியனாய் இறங்கினான். வீட்டுக்குச் சென்றான். குளித்தான். உடை மாற்றிக் கொண்டான். ஹோட்டலுக்குச் சென்றான். சாப்பாடு அவனுக்கு வேண்டியிருக்கவில்லை; அப்படியே எறிந்து விட்டு, 'இந்த ஹோட்டல்காரருக்குப் பூர்வ ஜன்ம கடன் எட்டணா இருந்திருக்கிறது; அதை இப்பொழுது அழுதிருக்கிறேம்' என்று நினைத்துக் கொண்டு பித்துப் பிடித்தவன் போல் கம்பெனிக்குப் போனான்.

கம்பெனியில் அவனைப் பார்த்த சக ஊழியர்கள் எல்லாம் உற்சாகமாக வரவேற்றார்கள். "அடாடா! உனக்கு அதற்குள்ளே தந்தி வந்து புறப்பட்டு வந்து விட்டாயா! நேற்று சாயங்காலம்தானே தந்தி கொடுத்தது! அதற்குள் அது உனக்கு எப்படி வந்து சேர்ந்தது......!" என்று தலைக்குத் தலை பேச ஆரம்பித்தார்கள்.

கல்யாணராமன் "தந்தியா! எனக்கா! எதற்கு! ஏன்! என்ன சொல்லுகிறீர்கள்!" என்று நின்று நின்று திக்கித் திக்கி ஒன்றும் புரியாமல் கேட்டான்.

"உன்னைக் கோயமுத்தூருக்குப் பிராஞ்சு மானேஜராக அறுநூறு ரூபாய் சம்பளத்தில் போட்டிருக்கிறார்கள்! நேற்றைக்குத்தான் இந்த சமாசாரத்தைத் தெரிவித்து, உடனே உன்னைப் புறப்பட்டு வரும்படி நம்ம மானேஜர் தந்தி யடித்திருந்தார்" என்றார்கள்.

கல்யாணராமனுக்கு 'இது பூலோகமா, கைலாசமா!' என்று புரியவில்லை; ஒரு கணம் தவித்தான். அவனுக்கு ஒருபுறம் அளவிட முடியாத சந்தோஷம் ஏற்பட்டது. கூடவே, இந்தச் சந்தோஷச் செய்தியைப் பகிர்ந்து கொள்ளக் காந்தி யில்லையே, அவளிடம் சொல்லிக் கொள்ளாமல் புறப்பட்டு வந்து, அவளுக்குத் தீராக் கவலையை வைத்துவிட்டோமே என்று துக்கமாக இருந்தது.

அதற்குள் மானேஜர் காரியாலயத்தில் நுழைந்தார். "ஓ கல்யாணராமனா! வந்துவிட்டாயா! பேஷ்! ரொம்ப நல்ல காரியம் செய்தாய். ஆபீஸில் ஆயிரம் ரூபாய் முன்பணமாக வாங்கிக் கொண்டு கோயமுத்தூர் புறப்படுவதற்கு வேண்டிய ஏற்பாடு செய்!" என்றார்.

இதைக் கேட்டதும் கல்யாணராமனின் நெஞ்சைத் துக்கம் வந்து அடைத்துக் கொள்ளும் போலிருந்தது. பாழும் மனுஷ ஜன்மம். சந்தோஷ சம்பவம் நேரும்போது கூடச் சந்தோஷப்பட முடியாதபடி துக்கமாக மாறுகிறதே என்று மிகவும் மனக்கிலேச மடைந்தான்.

அவனுக்கு என்ன செய்வது என்று புரியவில்லை. வெகுநேரம் யோசித்தான். "நான் சௌக்கியமாய் மதுரையிலிருக்கிறேன்; இன்றைக்கு ராத்திரி ரயிலில் புறப்பட்டு, நாளைக் காலையில் சென்னைக்கு வந்து சேருகிறேன்" என்று காந்திக்குத் தந்தி யடித்தான்.

மறு நாள் காலை, வேணுகோபாலன் பங்களாவுக்குள் ஒரு வாடகை மோட்டார் (டாக்ஸி) நுழைந்தது. அதிலிருந்து இறங்கியவர் கோயமுத்தூர் பிராஞ்சு மானேஜர் திருவாளர் கல்யாணராமன் என்று சொல்ல வேண்டிய தில்லை என்று நினைக்கிறேன்.

"என்ன அத்திம்பேரே! குதிரை வண்டி வைத்துக் கொண்டு வராமல் டாக்ஸியில் வந்து விட்டீர்கள்" என்று கூறி, விஷமச் சிரிப்புடன் வரவேற்றாள் சியாமளா. அவள் அருகில் காந்தி, கல்யாணராமன் வாங்கிக் கொடுத்திருந்த பழைய நூல் புடவையைக் கட்டிக் கொண்டு சோகமே உருவமாய் நின்று கொண்டிருந்தாள்.

அந்த நிலையில் காந்தியைக் கண்ட கல்யாணராமன் பேசக்கூடத் தெரியாமல் விழித்தான்.

அதற்குள் வேணுகோபாலன் மாடியிலிருந்தவன் விழுந்தடித்துக் கொண்டு ஓடி வந்து, "வாங்கோ, பிராஞ்சு மானேஜர் ஸார்! கங்கிராஜுலேஷன்ஸ். என்ன காந்தி, சும்மா நிற்கிறியே, எங்கே உன் கையாலேயே ஒரு கப் சூடான காப்பி கொண்டு வந்து கொடு. அந்தக் கைக்குத் தங்கக் காப்புகளாக இனிமேல் வரப்போகிறது பார்!" என்றான்.

"இனிமேல் என்ன, இப்பவே!" என்று சொல்லித் தன் கோட்டுப் பையிலிருந்து ஒரு பெட்டியை எடுத்தான். அதில் இரண்டு ஜதை பொன் வளையல்கள் இருந்தன. காந்தியின் முகம் என்றும் காணாத காந்தி பெற்றது! பிறகு பெட்டியைத் திறந்து 150 ரூபாய் விலையில் ஒன்றுபோல் இரண்டு பட்டுப் புடவைகள் எடுத்து, ஒன்று காந்திக்கும் மற்றொன்று சியாமளாவுக்கும் கொடுத்தான்!

"பலே, பலே, காந்தி! உன்பாடு யோகந்தான்......" என்று கூறினான் வேணு.

"அப்புறம் நாளைக்கே நாம் அவர்கள் கண்ணுக்குச் சர்வ சாதாரண மனுஷர்களாகிவிடப் போகிறோம்" என்றாள் சியாமளா.

இப்படி உல்லாசமாக நான்கு நாட்கள் சென்னையில் கழித்து விட்டு, காந்தியும் கல்யாணராமனும் கோயமுத்தூருக்குப் புறப்பட்டார்கள். ரயில் போய்க்கொண்டிருந்தது.

"இன்னுமா, காந்தி! உன் மனசு சரியாகவில்லை! என் மேல் ஏற்பட்ட கோபமோ வருத்தமோ தீரவில்லையா!" என்றான்.

"என்னை அழ அழ வைத்து விட்டு, என்னிடம் சொல்லாமல் கொள்ளாமல் போய்விட்டீர்களே......" என்றாள் காந்தி.

"நான் என்ன பண்ணட்டும்! உன் தங்கை வீட்டுக்குள் நுழைந்ததிலிருந்து அங்கு நடந்த ஒவ்வொரு காரியமும் மனசைப் புண்படுத்திக் கொண்டிருந்தன. என்னை விடாமல் அவமானப் படுத்துவது போல் தோன்றியது. மதுரையிலிருந்து இரண்டாவது தரம் வரும்போதுதான், புண்படக் கூடாத விஷயங்களுக்கு, அர்த்தமே இல்லாத விஷயங்களுக்கெல்லாம் என் மனசு அனாவசியமாக வேதனைப் பட்டிருக்கிறதே, என்ன அசட்டுத்தனம் என்று நினைத்துக் கொண்டேன். அப்புறம், இருந்த நாலு நாளும் சியாமளாவும் வேணுவும் முன்னைப் போலத்தான் தமாஷாகப் பேசிக் கொண்டிருந்தார்கள். என் மனசு கொஞ்சங்கூட விகல்ப மடையவில்லை......" என்றான் கல்யாணராமன்.

"இப்போதென்றால் நீங்கள் பிராஞ்சு மானேஜர் ஆகிவிட்டீர்கள். அறுநூறு ரூபாய் சம்பளக்காரர் ஆகிவிட்டீர்கள். உங்கள் ஷட்டகருக்குச் சமமாகத் தாங்கள் உயர்ந்துவிட்டதாக நினைக்கிறீர்கள். அதனால் அவர்கள் எது செய்தாலும் புண்படுத்தினாலும் உறைப்பதில்லை. பணத்தைக் கொண்டுதான் நீங்களும் அவரும் சமம் என்று நினைக்க வேண்டுமா! அற்பப் பணம்தான் இந்தப் பேத உணர்ச்சியைப் போக்க வேண்டுமா! இந்தப் பண வித்தியாசத்தினால் மனுஷனுக்கு மனுஷன் இவ்வளவு கோபமும் ஆத்திரமும் கொள்ளக்கூடும் என்றால் இந்தப் பணமே இல்லாமற் போய்விடக் கூடாதா! அல்லது எல்லாருக்கும் சமமாகப் பணமோ, செல்வமோ கிடைக்கக் கூடாதா! அதனால் எவ்வளவு சாந்தியும் சந்தோஷமும் ஏற்படும்!" என்றாள் காந்தி. அப்போது அவள் கண்களில் கண்ணீர் ததும்பி நின்றது.

இதைக் கேட்ட கல்யாணராமன் "நீ இப்போது சொன்னதெல்லாம், 'சோஷலிஸம்' என்று ஒரு கொள்கையிருக்கிறது, அதில் ஒரு அத்தியாயமே தவிர, வேறு ஒன்றுமில்லை" என்று சொல்லிவிட்டு நீண்ட கொட்டாவி விட்டுக் கொண்டே படுக்கப் போனான்.

# தலைவலி போய்......!

**நா. ராமச்சந்திரன்**

"அப்பப்பா, இனிமே ஒரு க்ஷணம் கூட இந்த வீட்டில் இருக்க முடியாது, என்ன சத்தம்! என்ன சத்தம்! ஐயமாட்டேன் என்கிறதே!" என்று அலுத்துக் கொண்டார் திருவாளர் சபாரத்தினம்.

அவர் சொல்லுவதில் என்னமோ உண்மையிருந்தது. அவர் குடியிருக்கும் பங்களாவுக்குப் பக்கத்து பங்களாவிலிருந்து சதா சத்தம் வந்து கொண்டுதான் இருந்தது. சில சமயங்களில் பொறுக்க முடியாமல்தான் இருக்கும். என்ன செய்வது! திடீர் திடீரென்று வீடு மாற்றுவது என்றால் எளிதான காரியமாகவா இருக்கிறது!

சத்தத்திற்குக் காரணம் பக்கத்து வீட்டுப் பெண் ஒருத்தி பாடுவதுதான். தனியாகப் பாடினால் ஏதோ சுமாராக இருக்கும், ஆனால் அவள் கூடவே பாடும் (அழும்!) ஐந்துகட்டை ஹார்மோனியத்தைப் பற்றி என்ன சொல்வது! அது இல்லாமல் அவள் பாடுவதே இல்லை. பாடத்தான் பாடுகிறாளே, இந்த ஜன்னலுக்கு அருகில்தானா உட்கார்ந்து பாட வேண்டும்!

சபாரத்தினம், ஒரு ரிடையர்டு என்ஜினீர். அவர் மயிலாப்பூர் லஸ் கார்னருக்கு அருகில் ஒரு பங்களாவில் வாசம் செய்து வந்தார். அங்கே, டிராம், பஸ் போடும் சத்தம் தாங்காமல் மாம்பலத்துக்கு ஜாகையை மாற்றினார்.

இங்கு வந்தும் பிரயோசனம் இல்லை. டிராம் சத்தத்திற்கு மேல் இருக்கிறது இவளது பாட்டும். அந்தப் பாழாய்ப்போன ஹார்மோனியத்தின் சத்தமும். இதற்கிடையில் அவள் அம்மாவின் "அதைப் பாடேண்டி, இதைப் பாடேண்டி" என்ற குரலும் சேர்ந்து விட்டால் சொல்ல வேண்டியதில்லை. வெண்கலக் கடையில் யானை புகுந்தது மாதிரிதான்.

சபாரத்தினத்தின் பொழுது போக்கு ஜோசியம். சிறு வயது முதற்கொண்டே அதிலே அவருக்குப் பற்று அதிகம். வேலையிலிருந்து ஓய்வு பெற்று விட்ட பிறகு ஜோசியத்தை நன்கு அபிவிருத்தி செய்து கொண்டிருந்தார்.

எனவே அவரது நண்பர்கள் சில சமயங்களில் ஜாதகங்களை எடுத்துக் கொண்டு அவரிடம் வருவார்கள். சபாரத்தினம் ஆழ்ந்த யோசனையுடன் ஜாதகத்தைக் கவனித்துக் கொண்டிருக்கும் போது பக்கத்து வீட்டிலிருந்து பாட்டு உதயமாகும். பிறகு மெதுவாக உச்சஸ்தாயிக்குச் செல்லும். அந்தப் பெண் சரளி உதிர்த்துப் பாட்டை முடிக்கும்போது அப்படியே கட்டிலின் மீது சாய்ந்து விடுவார், சபாரத்தினம். வந்திருப்பவர்கள், "ஏனோ நம் ஜாதகத்தைப் பார்த்தவுடன் மூர்ச்சையடைந்து விட்டார் இன்ஜினீயர்!" என்று நினைப்பார்கள்.

வர வர இந்தத் தொந்தரவு பொறுக்க முடியாமல் போய் விட்டது. இதற்கு எப்படியாவதும் ஒரு முடிவு கட்டியாக வேண்டும் என்று தீர்மானித்தார் திருவாளர் சபாரத்தினம்.

அன்று ஞாயிற்றுக்கிழமை; சபாரத்தினம் சாப்பாட்டை முடித்துக் கொண்டு சாய்வு நாற்காலியில் படுத்தார். படுக்குமுன் "இவள் பாடாமல் இருக்க வேண்டுமே" என்று மனதிற்குள் பிரார்த்தனை செய்து கொண்டார். அவர் படுத்து ஒரு மணி யிருக்கும். ஒருவர் அவர் பெயரைச் சொல்லி அழைத்துக் கொண்டு உள்ளே நுழைந்தார். அவரை உட்காரச் சொல்லி விட்டு வந்த விஷயம் என்னவென்று வினவினார்.

வந்தவர் இரண்டு ஜாதகங்களை அவர் முன் வைத்துப் பார்க்கச் சொன்னார். சபாரத்தினம் தமது முழுக் கவனத்தையும் ஜாதகங்களின் மேல் செலுத்திக் கொண்டிருந்த போது வந்தவர், "என்னை உங்களுக்குத் தெரிந்திருக்காது. பக்கத்து வீட்டில் குடி இருக்கிறேன்" என்றார்.

சபாரத்தினம் ஒரு துள்ளுத் துள்ளினார். குரு, சந்திரனைப் பார்த்ததற்காக இல்லை. பக்கத்து வீட்டு ஆசாமி வந்ததற்காக.

"சந்தோஷம், இது உங்கள் பெண் ஜாதகமா? ஒரு பெண் பாடிக் கொண்டிருப்பாளே அவளுடையதுதானே!" என்றார் நிதானமாக.

"ஆமாம். என் பெண்ணை உங்களுக்குத் தெரியுமா!" என்றார் வந்தவர்.

"என்ன அப்படிச் சொல்லி விட்டீர்கள்! என்ன சுகமான சாரீரம்! தினம் கேட்டுக்



தைலம் விற்பவர்:—'கூந்தல் மோகினி' மிக உயர்ந்த கூந்தல் தைலம். கனவான்களே! போலிகளைக் கண்டு ஏமாறுதீர்கள்.

கூட்டத்தில் ஒருவர்:—ஒரு சந்தேகம்!

தைலம் விற்பவர்:—என்ன?

கூட்டத்தில் ஒருவர்:—நீங்கள் விற்பது அசலா, போலியா?




கொண்டுதானே இருக்கிறேன்! அந்தப் பாட்டைக் கேட்காமல் போனால் எனக்குத் தூக்கமே வராது" என்றார் சபாரத்தினம்.

என்ன செய்வது! அப்படிப் பேசித்தானே ஆக வேண்டியிருக்கிறது!

வந்தவர் முகம் திருப்தியால் ஒரு முறை பூர்ண சந்திரன் போல் விளங்கியது. ஆனால் களங்கமில்லை. ஏனெனில் காலையில்தான் அவர் தமது முக க்ஷவரத்தை முடித்துக் கொண்டிருந்தார்.

சபாரத்தினத்தின் மனதில் திருப்தி குடி கொண்டது. அந்தப் பெண்ணுக்குக் கல்யாணம் ஆகிவிட்டால் புருஷன் வீட்டுக்குப் போய் விடுவாள். பிறகு தொந்தரவு இல்லை. வாரபலன் வீணாகுமா! 'திருப்தி நிலவும்' என்று போட்டிருக்கிறதே என்று எண்ணினார்.

"ஜாதகம் பேஷாகப் பொருந்தியிருக்கிறது. புருஷன், மனைவியோடு எல்லா விஷயத்திலும் ஒத்துப் போவான். இவள் வைத்ததுதான் சட்டம்!" என்று சொல்லிக் குஷிப்படுத்தினார்.

"பையன், கல்கத்தாவில் இருக்கிறான், கல்யாணம் ஆனவுடன் அழைத்துப் போக வேண்டும் என்று சொல்கிறான். அதுதான் குறையாக இருக்கிறது" என்றார் வந்தவர்.

சபாரத்தினத்தின் உள்ளம் பொங்கியது. "பேஷாக அனுப்பி வையுங்கள். அதுதான் நியாயம். கல்யாணமானவுடன் பெண் புருஷனோடு இருப்பதுதான் உத்தமம்" என்று தூபம் போட்டார்.

பிறகு அந்த வரன் நிச்சயமாகிக் கல்யாணமும் வெகு விமரிசையாக நடந்தேறியது.

நீண்ட பெருமூச்சு ஒன்று விட்டார் சபாரத்தினம். இப்பொழுதெல்லாம் பக்கத்து வீட்டிலிருந்து சத்தம் ஒன்றும் வருவதில்லை. கல்யாணமாகி அந்தப் பெண் புக்ககம் போய்விட்டாள். நிம்மதியாகத் தமது அலுவல்களைக் கவனித்து வந்தார் சபாரத்தினம்.

அன்று ஏதோ ஆழ்ந்த யோசனையில் "கொரியாப் போரின்" ஜாதகத்தைக் கணித்துக் கொண்டிருந்தார். நவக்கிரகங்களும் மானஸீகமாக அவரிடம் பேசிக் கொண்டிருந்தன. அப்போது மணி சுமார் மாலை ஐந்து இருக்கும். "தலாங், தலாங்" என்று சத்தம் தொடர்ந்தாற் போல் கேட்டது. அதைத் தொடர்ந்து பாட்டும், ஹார்மோனியமும் அலறின. சத்தம் சுமார் அரை மணி காலம் நீடித்தது. சபாரத்தினம் திகைத்துப் போய் எதிர் வீட்டு ஜன்னலைப் பார்த்தார். அவர் கண்கள் சுழன்றன. ஆம்! அந்தப் பெண் ஹார்மோனியம் சகிதமாக உட்கார்ந்து கொண்டு இருந்தாள். அவள் பக்கத்தில் மிருதங்கத்தை வைத்துக் கொண்டு ஒரு யுவன் உட்கார்ந்து கொண்டிருந்தான். மறுபடியும் பாட்டொன்று பாடினாள் அவள். அவள் ஹார்மோனியமும் அலறிற்று. இது இரண்டையும் தாண்டிக் கொண்டு மிருதங்கச் சத்தம் 'பளார் பளார்' என்று கேட்டது.

சபாரத்தினத்தின் முதுகிலேயே அறைவதைப் போல் இருந்தது, அந்த மிருதங்கத்தின் சத்தம். அவர் ஜன்னல் கதவுகளை ஓங்கிச் சாத்திக்கொண்டு, சமயலறைப் பக்கம் ஓடினார் தலை தெறிக்க.

அவரது மனைவி நடுங்கிப்போனாள். ஏனெனில் அவர் அப்படி ஓடிவந்தார்.

"கோதை, மறுபடியும் அதே சத்தம்! அந்தப் பெண் வந்து விட்டதா!" என்றார்.

அவர் மனைவி ஒரு தடவை சிரித்துக் கொண்டாள். பிறகு சொன்னாள்: "நீங்கள்தானே சொன்னீர்கள், ஜாதகம் பார்த்துவிட்டு, அவள் புருஷன் அவளோடு ஒத்துழைப்பான் என்று! அதுதான் ஒத்துழைக்கிறான். பாட்டுக்குச் சரியாய் எவ்வளவு நன்றாக அந்தப் பிள்ளை மிருதங்கம் வாசிக்கிறது பார்த்தீர்களா!"

"என்ன, அவள் புருஷனா!"

"ஆமாம், ஆமாம், கல்கத்தாவிலே எல்லாம் இப்போ ஏகக் கலாட்டாவாமே! அதனாலே இவர்கள் இரண்டு பேரும் இங்கே வந்து விட்டார்கள். அந்தப் பிள்ளைக்கு மிருதங்கம் வாசிக்கக் கொஞ்சம் பழக்கம் உண்டாம். இந்தப் பெண் போன பிறகு இன்னும் நன்றாகப் பழக்கமாகி விட்டது!"

சபாரத்தினம் கல்லாய்ச் சமைந்தார். இன்னும் பக்கத்து வீட்டிலிருந்து ஐந்து கட்டைச் சுருதியில் பாட்டு மிருதங்க சத்தத்துடன் வந்து கொண்டிருந்தது.



# "என் கிராமத்தில் விரோதி மலேரியாவை நாங்கள் வீழ்த்தி விட்டோம். இதற்கு உதவியது பாலுட்ரின்......

மலேரியாவைப்பற்றி எங்களுக்கு இனி பயமேயில்லை. எங்கள் கிராமத்திலே அது மிகவும் பயங்கரமான கஷ்டங்களைக் கொடுத்து வந்தது. ஆனால் ஒரு நாளைக்கு ஒரு 'பாலுட்ரின்' மாத்திரை விதம் 3 நாட்கள் உட்கொண்டால் மலேரியாவைக் குணப்படுத்தும் என்பது இப்போது எங்களுக்குத் தெரிந்துவிட்டது. மலேரியா வராமல் தடுக்க வாரம் ஒரு மாத்திரை உட்கொள்ளவேண்டும் என்பதையும் நாங்கள் அறிவோம்''.

ஒரு நாளைக்கு ஒரு 'பாலுட்ரின்' மாத்திரை விகிதம் (ஆகாரத்திற்குப் பிறகு தண்ணீருடன்) 3 நாட்கள் உட்கொண்டால் சாதாரணமாக மலேரியா பாதிப்பு அகலும். வாரம் ஒரு மாத்திரை விகிதம் உட்கொள்ளுவதனால் புதியதாக மலேரியா தொத்துவதினின்றும் தடுக்கச் செய்யும். பின்விட்டு கெடும் விரும்பத்தகாத கோளாறுகள் ஏதும் இல்லாதது 'பாலுட்ரின்'. சிறுவர்கள், வயோதிகர்கள், கர்ப்பிணி ஸ்திரீகள் யாவரும் முழு நம்பிக்கையுடன் உட்கொள்ளலாம். ஒரு மாத்திரை விலை ஓர் அணா. 'பாலுட்ரின்' 8 அணாவுக்கு 8 மாத்திரைகள் அடங்கிய தாள்களில் கிடைக்கும்.

# 'பாலுட்ரின்'

மலேரியாவுக்கு அற்புதமான ஔஷதம்.




குணத்தின் ICI சின்னம்

**இம்பீரியல் கெமிகல் இண்டஸ்ட்ரீஸ் (இந்தியா) லிமிடெட்,**

கல்கத்தா பம்பாய் சென்னை கொச்சி புதுடில்லி கான்பூர்.

ICX 3 TM

Edited Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press 116-119, Sladens Gardens, Poonamallee High Road, Kilpauk, Madras

REGD. No. M. 4392

